தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு - 165

# வீரையன் அம்மானை

பதிப்பாசிரியர் :

"பெரும்புலவர்"

டாக்டர் அ. மா. பரிமணம், எம். ஏ., எம். லிட்., பிஎச். டி.,



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூல்நிலையம்

கி. பி. 1979 ] [ விலை ரூ. 3—50 பை

தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு - 165

# வீரையன் அம்மானை

பதிப்பாசிரியர் :

"பெரும்புலவர்"

டாக்டர் அ. மா. பரிமணம், எம். ஏ., எம். லிட்., பிஎச். டி.,

தமிழ்த்துறைத் தலைவர்,

அ. வீரையா வாண்டையார் நினைவு திரு. புட்பம் கல்லூரி, பூண்டி.



தஞ்சை சரசுவதி மகால் நிருவாகக் குழுவினருக்காகக்

கௌரவ காரியதரிசி

வித்துவான் அ. வடிவேலன் அவர்களால்

வெளியிடப்பட்டது.

கி. பி. 1979 ] [ விலை ரூ. 3—50 பை

# முன்னுரை

வீரையன் அம்மானை என்னும் இந்நூல் தலைப்பு சிந்தனைக்கு விருந்தாக அமைந்துள்ளது. மதுரை வீரன் அம்மானை என்றால் யாவரும் அறிவர். இந்நூலாசிரியர் அம்மானை என்னும் நெடும் பாடல் வகையில் மட்டும் இந்நூலை அமைக்காது வெண்பா, விருத்தம், கலித்துறை, கொச்சகம், தாலாட்டிசைக்கும் தனி நடைப் பாடல் முதலியவற்றால் படைத்துள்ளார். கதைத்தலைவன் மனித ராகத் தோன்றி தம் வீரத்தொண்டினால் மக்கள் உள்ளத்தில் தெய்வமாக இடம் பெற்றவர். இந்நூலில் வீரமும், காதலும் விரித்துப் பேசப்படுகிறது. உவமை நயங்களும் கருத்து மிக்க கற்பனைச் செறிவும் படித்து இன்புறத்தக்கன. வீரையன் மீது 'மதுரை வீரன் அம்மானை', 'மதுரை வீரசுவாமி கதை', 'வீரையன் அம்மானை' என்று மூன்று நாட்டுப்பாடல்கள் உள்ளன. தமிழிலுள்ள எந்த அம்மானைப்பாடல் தலைவரைப்பற்றி மூன்று நாட்டுப்பாடல்கள் அமைந்திருப்பதாகத் தெரியவில்லை என்ற செய்தியைப் பதிப் பாசிரியர் அவர்களும் தம் ஆய்வுரையில் தெளிவாக்கி உள்ளார்கள். இக்கதையைத் தமிழுலகம் நன்கறிந்திருப்பினும் இப்பெயரில் வெளி வரும் இந்நூல் நாட்டுப்பாடல்களை ஆய்வு செய்பவர்களுக்கு உதவியாய் அமையுமெனக் கருதி வெளியிடலானோம்.

இந்நூலின் பதிப்பு வேலையைத் தக்கவரிடம் ஒப்படைக்க விழைந்து பூண்டி, அ. வீரையா வாண்டையார் நினைவு திரு புட்பம் கல்லூரி, தமிழ்த்துறைத்தலைவர், பெரும்புலவர் டாக்டர் அ. மா. பரிமணம் அவர்களிடம் இப்பொறுப்பை ஒப்புவித்தோம். அவர்களும் தமது ஆழ்ந்த புலமையாலும், அனுபவத்தாலும் நூலை நன்முறையில் பதிப்பித்தும் தக்க ஆய்வுரை எழுதியும் தந்தார்கள். அவர்களுக்கு எங்கள் நன்றிகலந்த பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்கிறோம். மேலும் இந்நூல் நன்முறையில் வெளிவரத்தக்க வகையில் செயலாற்றிய துணைநூலகர் திரு ம. சீராளன், பி. ஏ., அவர்களுக்கும் எமது நன்றி உரியதாகும்.

இதனை அழகுற அச்சிட்டுத் தந்த தஞ்சாவூர் ஜெமினி அச்சகத்தாருக்கும் எங்கள் அன்பு கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்நூல் வெளிவர ஆக்கமளித்தும், இத்தகைய பணிகளுக்கு ஊக்கமளித்தும் வரும் நமது தமிழக அரசை நன்றியோடு போற்றி மகிழ்கின்றோம்.

தஞ்சாவூர்,
24-2-1979.

அ. வடிவேலன்
கௌரவ காரியதரிசி.

# பதிப்புரை

*"வைய மீன்றதொன் மக்கள் உளத்தினைக்*
*கையி னுலுரை கால மிரிந்திடப்*
*பைய நாவை யசைத்த பழந்தமிழ்*
*ஐயை தாள்தலைக் கொண்டு பணிகுவாம்"*

பழமைச் சிறப்பும் புதுமைப் பொலிவும் கொண்டு விளங்கும் தஞ்சைத்தரணி பெற்றுள்ள சிறப்புக்களுள் சோழப்பேரரசர் படைத்தளித்த பெருங்கோயிலும், மராத்திய மன்னர் காத்தளித்த சரசுவதி மகால் நூலகமும் குறிப்பிடத் தக்கனவாகும். முன்னது தமிழ் மக்கள் தம் பண்பாட்டுயர்வினைப் பக்தி அடிப்படையில், காட்சி அளவையால் உலகிற்குணர்த்தி நிற்கும் கலைச்சின்னமாக இலங்கப் பின்னது அதனை ஞான அடிப்படையில் கருத்தளவையால் உணர்த்தும் கலைக் கருவூலமாக விளங்குகின்றது.

ஞானக் களஞ்சியம் என்னும் கருத்தில் 'சரசுவதி பண்டாரம்' என்று கல்வெட்டுக்களில் பேசப்பெறும் சிறப்புடைய சரசுவதி மகால் நூலகம், ஆற்றுப் பெருக்கற்ற நிலையிலும் தன்ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும் ஆற்றினைப் போல, வளம் குறைந்த நிலையிலும், வடமொழி, தமிழ் முதலிய பன்மொழிகளிலமைந்த அரிய பல நூற் செல்வங்களை அச்சிட்டு வழங்கும் தொண்டினை அயராது மேற்கொண்டு வருகிறது. அரிய கலைச்செல்வங்களைப் போற்றிக் காத்து வளர்க்க வேண்டும் என்னும் அடிப்படையில் மராத்திய மாமன்னர்-கலைக்காவலர்-சத்ரபதி சரபோஜி அவர்கள் தொடங்கிய பணி இன்றும் தொடர்ந்து நடைபெறுவது அறிந்து இன்புறத்தக்கதாகும்.

சரசுவதி மகால் நூலகம் ஆற்றிவரும் தமிழ்ப்பணியின் பயனாய் வெளிவந்துள்ள அரிய தமிழ்நூல் வரிசையில் அம்மானை என்னும் சிற்றிலக்கிய வகை சார்ந்த சில நூல்கள் உள்ளன. அவ்வரிசையில் 'வீரையன் அம்மானை' எனப் பெயரிய இச்சிறு நூலும் இடம் பெறுகிறது. இந்நூலகத்தின் முந்திய வெளியீடான இராமையன் அம்மானை, தமிழக வரலாற்று மாந்தருள் ஒருவரைப் பற்றியது. அண்மையில் வெளிவந்த கஞ்சனம்மானை புராண இதிகாசத் தலைவராக விளங்கும் தெய்வத்தினைத் தலைவராக கொண்டமைந்தது. வீரையன் அம்மானை என்னும் இந்நூல், மனிதராகத் தோன்றித் தம் வீரத்தொண்டினால் மக்கள் உள்ளத்தில் தெய்வமாக இடம் பெற்ற ஒருவரைப் பற்றியது.

இந்நூலின் பிற்பகுதி கிடைக்காமையால் இது நிறைவு எய்தாத நூலாக உள்ளது. இதனை இந்த நிலையில் சரசுவதி மகால் நூலகம் தன் வெளியீடாக வெளியிட முன் வந்தது பாராட்டத்தக்க அரிய செயலாகும். மனிதன் தெய்வமாகிப் போற்றப்படும் நிலையில் அமையும் நாட்டுப்பாடல்கள் காலஇட வேறுபாடுகளால் கதை யமைப்பிலும் கற்பனையிலும் பல்வகை மாற்றங்கள் எய்தி வளர்ச்சி யடைதல் கூடும். இவ்வுண்மை, மதுரை விரசுவாமி கதை, மதுரை வீரன் அம்மானை என்ற பெயரில் நாட்டுப் பாடல்களாக அமைந்து முன்னரே வெளிவந்துள்ள நூல்களோடு இந்நூலினை ஒப்பிட்டுப் பார்த்தால் புலனாகும்.

வணிக நோக்குடைய நூல் வெளியீட்டாளர்கள் முழுதும் கிடைக்காத இதுபோன்ற நூல்களை வெளியிட முன்வாரார். இந் நூலினைச் சரசுவதி மகால் நூலகம் வெளியிட முன்வராதிருந்தால், நாட்டுப்பாடல் பற்றிய ஆராய்ச்சிகள் மதுரைக் காமராசர், சென்னை முதலிய பல்கலைக்கழகங்களால் ஊக்கம் பெறும் இக்காலத்தில், நாட்டுப்பாடல் வளர்ச்சி வரலாற்றில் அரிய உண்மையைப் புலப் படுத்தி நிற்கும் இவ்வேடு ஆய்வாளர்கள் எளிதிற் காணமுடியாத படி ஒரு மூலையில் முடங்கிக் கிடந்திருக்கும். இந்நூல் வெளியீட்டால் சரசுவதி மகால் நூலகம் நாட்டுப் பாடலாராய்ச்சிக்கு அரியதொரு தொண்டினை ஆற்றிய பெருமையைப் பெறுகின்றது.

வீரையன் அம்மானை என்னும் இந்த நூலினைச் செம்மை செய்து வெளியிடும் பணியினைச் சரசுவதி மகால் நூலகம் எனக்கு நல்கியது. அதனை எனக்களித்த பணியாகக் கருதி உவந்தேற்றுக்கொண்டேன். இப்பணியை நிறைவேற்றுதற்கு அனுமதி வேண்டிய போது அன்புடன் அனுமதி வழங்கிய, பூண்டி அ. வீரையா வாண்டையார் நினைவு திரு புட்பம் கல்லூரி ஆட்சிக்குழுச் செயலர் தாளாளரும், அகப்புறத்தூய்மையும், ஆன்மீக நாட்டமும் பன்மொழிப் புலமையும் பண்பொளிர் பாங்கும் திகழத்திகழும் திருமனச் செம்மலுமாகிய திருவாளர் கி. துளசி ஐயா வாண்டையாரவர்கட்கும், இவ்வெளியீட் டுப் பொறுப்பினை எமக்கு நல்கியுதவிய பேரறிஞர், முதுபெரும் புலவர் சரசுவதி மகால் நூலக மதிப்பியற்செயலர் உயர்திரு வித்துவான் அ. வடிவேலனாரவர்கட்கும் என் இதயங்கனிந்த நன்றியைத் தெரி வித்துக் கொள்ளுகிறேன். இவ்வெளியீட்டினை நான் செம்மையாகச் செய்து முடிப்பதற்குப் பலவகையிலும் அன்போடு உதவியாக விளங்கிய சரசுவதி மகால் நூல் நிலையத்துணை நூலகர் உயர்திரு ம. சீராளன் பி. ஏ. அவர்கட்கும், நூலகத் தமிழ்ப்புலவர் இனிய நண்பர் உயர்திரு வித்துவான் சொக்கலிங்கம் அவர்கட்கும் என் உளமார்ந்த நன்றியைப் புலப்படுத்திக்கொள்ளுகின்றேன்.

தஞ்சை,
21—10—78.

அன்பன்,
**அ. மா. பரிமணம்.**

# விறலியன் அம்மானை

## ஆய்வுரை

**இசை நலம் :**

இசை இனியது, இன்பம் பயப்பது. அது இயலின் அறிவுக் கூற்றையும், நாடகத்தின் செயற்கூற்றையும் இசைத்து நிற்பது. பாடுவோரையும் கேட்போரையும் இசைத்து நிற்பது. அஃறிணை உயிர்களும், உயிரற்ற அஃறிணைப் பொருள்களும் இசைக்கு இசையு மென அறிகின்றோம். மக்களுடைய மொழிகள் ஏட்டில் இடம்பெறு முன்னரே அவர்தம் இசை இதயத்தில் இடம் பெற்றுவிட்டது. மக்கள் உருவாக்கிய இலக்கியங்களுக்கு இசை பெருந்துணை புரிவதாக அமைந்தது. இலக்கிய வடிவங்களுக்கு இசை அடிப்படை யாக அமைந்தமையால் இலக்கிய வகைகளுள் பாட்டுக்கலை உயர்ந்தது என்றும் தூயது என்றும் அறிஞர் கருதுவாராயினர். மனிதன் படைத்துக் கொண்ட இன்ப வாயில்களுள் இசையே முதன்மையானது. இசை மலிந்த பாடலின் இன்பத்தில் திளைத்த பாரதியார், அதன் பெருமை கூறுங்கால் அது நான்முகன் படைப்புக் களில் மிகவும் விந்தையானது என்ற கருத்தில்,

*“ ஆனாலும் நின்றன் அதிசயங்கள் யாவினுமே*
*கானமுதம் படைத்த காட்சிமிக விந்தையடா*
*காட்டு நெடுவானம் கடலெல்லாம் விந்தையெனில்*
*பாட்டினைப் போல் ஆச்சரியம்பாரின்மிசை இல்லையடா ”*

எனக்கூறி வியக்கின்றார். இசையினை ‘ நாதங் சேரும் நயம் ’ என்றும், அஃதளிக்கும் இன்பத்தினை ‘ உவமையிலா இன்பம் ’ என்றும் கூறுகின்றார்.

நுட்பங்கள் நிறைந்து நாதமயமாகத் திகழும் தனி நிலையில் இசையினை எல்லோராலும் முழுதும் நுகரக்கூடும் என்று கூற முடியாது. அதுவே மொழியோடு கலந்து வெளிப்படுங்கால் பாமரரும் நெஞ்சுருகி நிற்கும் நிலை எய்துவர். பாரதிப்பாவல ருடைய கவிச்சிறப்பினை உணர்த்த வந்த கவிமணி,

*“ பாட்டுக் கொருபுலவன் பாரதியடா — அவன்*
*பாட்டைப் பண்ணோடொருவன் பாடினனடா.*
*கேட்டுக் கிறுகிறுத்துப் போனேனே யடா ”*

என்று பாராட்டும் பாராட்டுரையில் இவ்வுண்மை புலனாகிறது. தனியே ஒருவர் பாடும் பாட்டிசையில் மயங்கிய மக்கள் பலராகச் சேர்ந்து பாடி மகிழலாயினர். பலர் சேர்ந்து பாடும் கூட்டமுதப் பாட்டின் பயனை அறிந்தவர்கள், தாங்கள் புரியும் வேலையில் அவ்வாறு பாடுவது, துன்ப நீக்கத்திற்கும் இன்ப ஆக்கத்திற்கும் வாயிலாக அமைவதனை உணர்ந்து அதனை மேற்கொள்வாராயினர். அவ்வகைப் பாடல்கள் ஏற்றப்பாடலாக, நெல்லிடிக்கும் கோற்றொடியார் குக்கூ எனப்பாடும் ஒலியாக, சுண்ணம் இடிப்பார் சுவை மிகுந்த பண்ணாகப் பரிணமித்தன.

## நாட்டுப்பாடல் :

தங்கள் தொழிலுக்கும் இசை துணையாவதறிந்த தமிழ் மக்கள், மிகப் பழங்காலத்திலேயே அதனைப் போற்றிப் பயன் கொள்வாராயினர். ''ஏழிசையாய் இசைப் பயனாய்'' என்றும், ''இயலிசைப் பொருள்களாகி'' என்றும், ''பாட்டான நல்ல தொடையாய்'' என்றும் தம் இறைவனையே இசைவடிவில் கண்டேத்தும் தமிழ் மக்கள் இசையால் தொழிற்பயன் கொண்டதில் வியப்பில்லையன்றோ! இயற்கையோடியைந்து திணை வாழ்வில் திளைத்த பழந்தமிழ் மக்களின் இசைப் பாடல்கள் குன்றக் குரவையாக, ஆய்ச்சியர் குரவையாக, கானல் வரியாக, கந்துக வரியாக, ஊசல் வரியாக, அம்மானையாக, பாவைப் பாட்டாக, பூவல்லியாக, பொற் கண்ணமாகத் திகழ்ந்த பாங்கினைப் பழந்தமிழ்ப் பனுவல்கள் காட்டுகின்றன.

அவ்வகைப் பாடல்கள் தொடக்க நிலையில் புலவரல்லாத பொது மக்கள் உள்ளத்தில் ஊற்றெடுத்து அவர்தம் செவிகளையும், சிந்தைகளையும் களங்களாகக் கொண்டு நிலைத்தன. அவை நாட்டுப் பாடலாக (Folk Song) – நாட்டவர் பாடலாகப் போற்றப்பட்டன. அப்பாடல்களின் செல்வாக்கினை உணர்ந்த புலவர்கள் அவற்றின் இசையமைப்பினைப் பின்பற்றித் தாங்களும் பாடித் தங்கள் ஏடுகளில் தவழ விட்டனர். இவ்வாறு பொது மக்களின் இசையுணர்விற்குப் புலமக்கள் அளித்த ஒப்புதலை, பாராட்டுதலைச் சிலப்பதிகாரம், திருவாசகம் போன்ற தமிழ்ப் பனுவல்களில் நாட்டுப் பாடலடிப் படையிலமைந்துள்ள இசைப் பாக்களால் அறிய முடிகின்றது. பாடல்களை ஏட்டில் வடிக்கும் வாய்ப்புக்கள் பெருகிய நிலையிலும், மக்கள்தம் செவியைச் செறுவாகக் கொண்டு வாழும் நாட்டுப் பாடல்கள் தோன்றி வாழ்ந்து கொண்டே வந்துள்ளன. தாம் தோன்றும் காலச் சூழலால் நாட்டுப் பாடல்களின் சொற்களில், தொடர்களில், வடிவங்களில் மாற்றங்கள் தோன்றலாமேயன்றி மறைவு தோன்றுவதற்கு ஏதுவில்லை. நாட்டுப் பாடல்களின் சிறப்பையும் வளர்ச்சியையும் பற்றிக் குறிப்பிடுங்கால், ''மலையிலிருந்து தானே வீழும் அருவியாக, காட்டிலே தானே மலர்ந்து மணக்கும்

முல்லையாக, சோலையிலே தானே பாடும் குயிலின் இன்னிசையாக நாடோடிப் பாடல்களும் வளர்ந்தன'' என்று அறிஞர் கி. வா. ஜ. அவர்கள் கூறுவது குறிப்பிடத்தக்கதாகும்.

**அம்மானை :**

வாய்மொழிச் செல்வங்களாக வாழ்வு பெற்ற இசைப் பாவடிவங்கள் புலவர்கள் உதவியால் ஏட்டிலே குடிபுகத் தொடங்கிய பின்னர் அவை இலக்கிய வகை (Genre) களாகப் போற்றப் பெற்றன. வழிநடைப்பாடல்கள் தெம்மாங்கு, சிந்து என்றும், தொழில் துறைப் பாடல்கள் பள்ளு, குறம் என்றும், ஆட்டப் பாடல்கள் அம்மானை ஊசல் என்றும் இன்னபிற வாகவும் இலக்கிய வகைகளாயின. பிற்காலப் பாட்டியல் நூல்கள் தொகுத்துச் சுட்டும் சிற்றிலக்கிய வகைகளிற் பல இவ்வகையி லமைந்த இலக்கிய வளர்ச்சிகளேயாகும்.

நாட்டுப் பாடல் அடிப்படையில் தோன்றிப் பொதுமக்களாலும், புலமக்களாலும் புரக்கப்பெற்று ஏட்டிலும் மக்கள் இதயத்திலும் இன்றும் நின்றுவாழும் இலக்கிய வகைகளில் அம்மானை குறிப் பிடத்தக்கதாகும். அம்மானையின் தோற்ற வளர்ச்சி பற்றிய பல அரிய குறிப்புக்கள் பேராசிரியர் திரு. கி. கோதண்டபாணி எம். ஏ., பி. ஓ. எல். அவர்களாற் பதிப்பிக்கப்பெற்று, சுரசுவதி மகால் நூலக வெளியீடாக வந்துள்ள 'கஞ்சனம்மானை' முகவுரை யில் இடம்பெற்றுள்ளன. தமிழில் அம்மானை பற்றி ஆராய்ச்சி மேற்கொண்டவர்களும் உள்ளனர்.

ஏட்டில் எழுதப்பெறாது, நாட்டு மக்களின் வாய்மொழிச் செல்வ மாக வளம்பெற்ற பழங்கால அம்மானைப் பாடல்களின் இயல்புகள் பற்றி, ஏட்டில் இடம்பெற்று இலக்கியங்களாகத் திகழும் நூல்களில் அமைந்துள்ள அம்மானைப் பாடல்களைக் கொண்டே அறிய வேண்டியுள்ளது. தொடக்க நிலையில் அம்மானை இரண்டு அல்லது மூன்று பெண்கள் கூடி அம்மனைக் காய்களை உயரே செலுத்திப் பிடித்து விளையாடும் விளையாட்டுப் பாடலாகவே அமைந்திருக்க வேண்டுமெனத் தெரிகிறது. விளையாடுபவர்களில் ஒருவர் முதலில் ஒரு வினவை எழுப்புவதும், இரண்டாமவர் அதற்கு விடை பகர் வதும், மூன்றுமவர் அதுபற்றி ஒரு முடிவு கூறுவதுமாக அம்மானைப் பாடல் அமைந்துள்ளது. இருவர் விளையாட்டாயின் இம் முச்செயல் களையும் இருவரே செய்தனராதல் வேண்டும். விளையாட்டில் ஈடுபடும் ஒவ்வொருவர் கூற்றின் இறுதியிலும் அம்மானை என்னுஞ் சொல் ஒரு சீராய் அமைந்து காணப்படுகிறது. இதனைச் சிலப்பதி கார வாழ்த்துக் காதையில் இடம்பெற்றுள்ள அம்மானைப் பாடல் களால் அறியலாம்.

நாட்டுப் பாடல் நிலையிலிருந்து ஏட்டுப் பாடலான நிலையில் அம்மானைப் பாடல்கள் பல மாறுதலெய்தி வளரலாயின. ஒட்டக் கூத்தரும் புகழேந்தியும் உறழ்ந்துபாடிச் சோழர் பாண்டியர் சிறப்பினைப் புலப்படுத்தியதாக அமையும் இரண்டு தனிப்பாடல் களும் அம்மானைப் பாடலில் ஏற்பட்ட வளர்ச்சியினைக் காட்டுவன வாக உள்ளன. இப்பாடல்கள் சிலப்பதிகார அம்மானைப் பாடல் களின் அமைப்பிற்கு வேருக அமைந்துள்ளன. மூவர் விளையாடு வதாக அமையும் அம்மானைப் பாடல்கள், முதற்பெண் கூறும் ஒரு செய்தியைச் சுட்டி இரண்டாவது பெண் ஒரு வினாத் தொடுக்க, மூன்ருவது பெண் சிலேடை மணங்கமழ விடை கூறி முடிக்கும் பாங்கிலும் தோன்றின. இவ்வகை அம்மானைப் பாடல்கள் தனிப் பாடல்களாகவும், கலம்பக உறுப்பாகவும் அமைந்தன. பெண்டிர் அம்மானை பாடியாடும் விளையாட்டின் சிறப்பினுல் அவர்கள்மீது பாடப்பெறும் பிள்ளைத்தமிழ்ப் பிரபந்தங்களில் அம்மானை ஒரு பருவ மாக அமைக்கப்பட்டுள்ளது.

பெண்களின் விளையாட்டுப் பாடலாக அமைந்த வேறு சில பாடல்களைப் போலவே, அம்மானைப் பாடலின் அழகையும் ஆற்றலையும் உணர்ந்த மாணிக்கவாசகர் தம் திருவாசகத்தில் 'திருவம்மானை' என்னும் பகுதியாக இருபது பாடல்கள் பாடி யுள்ளார். பொதுவாக மன்னர் பெருமையைப் பாடுபொருளாகக் கொண்டு மகளிரால் பாடப்பெற்ற அம்மானைப்பாடல், திருவாசகத் தில் பக்தர்களெல்லாரும் இறைவனைப்பாடிப் பரவுவதற்கான இலக்கிய வடிவமாகத் திகழ்கின்றது.

புலமக்களிடத்தில் அம்மானைப்பாடல் வேறுபாடு எய்தியது போலவே, பொது மக்களிடமும் அப்பாடல் வேறுபாடெய்தி வளர்ந்து வந்துள்ளது. தனிச்செய்யுளாய் விளையாட்டுப் பாடலாக விளங்கிய அம்மானைப்பாடல், விளையாட்டியல்பு நீங்கப்பெற்று நெடிய கதை கூறிச்செல்லும் பாடலாக உருமாறியது. உடுக்கு, வில் முதலிய கருவிகளின் துணைக்கொண்டு ஒருவரோ சிலரோ பாடப் பலரிருந்து கேட்கும் நீண்டநெடும் பாடலாக அம்மானைப் பாடல் வளர்ந்தது. தெய்வங்கள் பற்றியும், மானிடத்தலைவர்கள் பற்றியும், புராண நிகழ்ச்சிகள் பற்றியும் நெடிய நாட்டுப்பாடல்கள் தோன்றிப் பாமர மக்களிடம் செல்வாக்குப் பெற்றன. இதன் சிறப்பினையும் செல்வாக்கினையும் உணர்ந்த புலவர்கள் இந்த அம்மானை அமைப்பிலும் பாடல்கள் எழுதலாயினர். செவி வழிப் பாடலாக நிலவி வந்த இவ்வகைப்பாடலிற் சில ஏடுகளில் எழுதப் பெற்றன. பஞ்சவர்கள் கதை அம்மானை, வீரையன் அம்மானை போன்றன நாட்டுப்பாடலாக முதலில் நிலவிப் பின்னர் ஏட்டில் இடம் பெற்றனவாகும். தமிழ் அம்மானை, காந்தி அம்மானை போன்றன தொடக்கத்திலேயே ஏட்டுப்பாடலாக எழுந்தனவாகும்.

இவ்விரு வகையாகவும் அமைந்த நாட்டுப்பாடல்களுககுள்ள செல் வாக்கினை அறிந்த, பல்வேறு சமயங்களைச் சார்ந்த புலவர்கள் தத்தம் சமயச் சார்புடையனவாகப் பல அம்மானைகளைப் புனைந் துள்ளனர். சீரங்க அம்மானை, மாணிக்கவாசகர் அம்மானை, நபியவதார அம்மானை, கித்தேரியம்மாள் அம்மானை, பார்சுவ நாதர் அம்மானை போன்றன சமய அடிப்படையிலமைந்த அம்மானை நூல்களிற் சிலவாகும்.

பொதுவாக இத்தகைய நாட்டுப் பாடல்களின் ஆசிரியர் பெயர் அறிந்து கொள்ள முடியாமலேயே உள்ளது. கால இடச் சூழல்களுக்கு ஏற்ப இப்பாடல்கள் வேறுபாடுகளும் வளர்ச்சியும் எய்தும் தன்மையிலிருப்பதனால் இவற்றின் மூல வடிவ மும், மூல ஆசிரியர் பெயரும் மறக்கவும், மறைக்கவும் பட்டிருக்க லாம். இத்தகைய நெடும் பாடல்கள் நூலுருக்கொள்ளுங்கால் சில புகழ்மிக்க புலவர்களை ஆசிரியராகக் கூறும் பழக்கமும் நிலவியது. கதை பொதி நெடும் பாடலான சில நூல்கள் இன்றும் புகழேந்திப் புலவர் பெயரில் வழங்கப் படுகின்றன.

**வீரையன் அம்மானை :**

மதுரை வீரன் மீது, 'மதுரை வீர சுவாமி கதை' 'மதுரை வீரன் அம்மானை' என்ற பெயர்களில் நூல்கள் வெளிவந்துள்ளன. மதுரை வீரன் அம்மானை என்னும் நூல் மதுரை கூடல் பதிப்பகத் தாலும், மதுரை வீர சுவாமி கதை சென்னை ஆர். ஜி. பதி கம்பெனி யாலும் வெளியிடப்பட்டுள்ளன. 82 ஆண்டுகளுக்கு முன்பு சென்னை அருணகிரி முதலியாரால் வெளியிடப்பட்ட மதுரை வீர சுவாமி கதைப் பதிப்பும் உண்டு. சென்னை அரசினர் கீழ்த் திசைக் கையெ ழுத்துப் பிரதிகளின் நூல் நிலையத்திலுள்ள 'வீரையன் அம்மானை' எனப் பெயரிய ஏட்டுச்சுவடிகள் ஒப்பிட்டுப் பார்க்கவும் இல்லாத வாறு பொடிந்தும் ஒடிந்தும் உள்ளன. சரசுவதி மகால் நூலகம் வெளியிடும் இந்த அம்மானைப் பாடல், வெளிவந்துள்ள மதுரை வீரன் பற்றிய நாட்டுப் பாடல்களோடு ஒத்திருக்கவில்லை. கதை யின் அடிப்படை மட்டும் ஒன்றுக உள்ளது. நாட்டுப்பாடலியல்பிற் கேற்பச் சிலபல தொடர்களும், அடிகளும், ஒத்திருந்தாலும் வர்ணனைகள், நிகழ்ச்சிகள் முதலியவற்றில் குறிப்பிடத்தக்க மாறு பாடுகள் கொண்டு விளங்குகிறது. யாப்பமைதியிலும் வீரையன் அம்மானை தனித்தே நிற்கின்றது. ஏனைய நூல்கள் நடை என வழங்கும் தொடர்ப் பாட்டாகவும், இடையில் சில இடங்களில் சில விருத்தங்கள் கொண்டும் அமைந்துள்ளன. ஆனால் இவ் வீரையன் அம்மானை, வெண்பா, விருத்தம், கலித்துறை, கொச்சகம், தாலாட் டிசைக்கும் தனி நடைப்பாடல் போன்றனவற்றை இடையிடையே கொண்டுள்ளது. இதனை வாழ்த்துரைக்கும் தொடக்கப் பகுதியில் பாடலாசிரியரே,

*"விருசோ கலித்துறையும் விருத்தமுடன் கொச்சகமும்
கழிநெடில் வெண்பா கலந்து மிகவுரைக்க"*

என்று கூறுவதனல் அறியலாம்.

நூலின் பெயரிலும், இறைவணக்கப் பகுதியில் ' அம்மானை பாட அருள் புரியவேண்டும் '' என வருமிடத்திலும் மட்டுமே அம்மானை என்ற சொல் இடம்பெறுகின்றது. நூலின் பிற பகுதி களில் அச்சொல் இடம்பெறவில்லை. பிற அம்மானைப் பாடல் களிலும் அம்மானை என்ற சொல் ஓசை நிறைக்கும் சொல்லாகப் பலவிடங்களிலும், அடிகளின் இறுதியில் இடம்பெற்றுள்ளன. பிற்காலத்தில், அசைச் சொல்போல ஓசை நிறைக்கும் சொல்லாக அம்மானைச் சொல் பயன்பட்டமையால், இந்நூல் அதனைக் கைவிட்டது போலும். அச்சொல் இடம்பெருத நிலையிலும், நூல், அம்மானை என்ற பெயரில் வழங்குவது குறிப்பிடத்தக்கது.

**விளையரன் வரலாறு :**

வடக்கே காசிமாநகர் வளங்களெல்லாம் நிறைந்த பெருநகர மாகும். அதனைத் தலைநகரமாகக் கொண்டு குலப்பெருமையும், குடிப்பெருமையும் சிறந்து நாராயணன் எனப்பெயரிய மன்னர் ஆண்டுவருகின்ருர். அறநெறி தவருது ஆண்ட அம்மன்னன் மகப்பேறின்மையால் மனம் மிகவருந்தி, மகப்பேற்றினை விரும்பி, அறங்கள் பல புரிந்து, நோண்புகள் மேற்கொண்டதனேடு வனம் புகுந்து தவம் புரிவாராயினர். தவப்பயனுக இறைவன் திருவரு ளால் அழகியதோர் ஆண் குழந்தை பிறந்தது. அது கொடி சுற்றியும், மாலையிட்டும் பிறந்தமையால், அதன் சாதகப் பயனை ஆராய்ந்த சோதிடர்கள், அக்குழந்தையால் அரண்மனைக்கும், அரச குலத்திற்கும் தீங்கு விளையுமென்றும், அதனல் அரைக் கணமும் தாழ்த்தாது குழந்தையைக் காட்டில் கொண்டு விட்டுவிட வேண்டுமென்றும் கூறினர். அதுகேட்டு அலறித்துடித்த பெற் ரோர்கள் அக்குழந்தையைக் கொண்டுசென்று காட்டிலே விட்டுவர ஏற்பாடு செய்தனர். அடர்ந்த கானகத்தில் அனுதையாக விடப் பட்ட குழந்தை இறையருளால் ' நாகம் குடைபிடிக்க நல்லபாம்பு' தாலாட்ட, காட்டுப் பெருவிலங்குகள் காவல் செய்ய வளர்ந்தது.

இந்நிலையில் பாளையப்பட்டாக விளங்கும், தொட்டியர் சமுதாயத்தைச் சேர்ந்த பொம்மணன் என்பானுக்குச் செருப்புத் தைக்கும் தொழில் மேற்கொண்டிருந்த மாதியச் சின்னன் என்னும் சக்கிலியனுடைய மனைவி ஆவாரம் பட்டை வெட்டுவதற்காக அக் காட்டிற்குச் சென்ருள். குழந்தை அழுகின்ற குரல் கேட்டு அத் திசை நோக்கிச் சென்ற அவள் மாமரம் ஒன்றின் அடியில், யாருமின்றி ஓர் ஆண்குழந்தை கிடக்கக்கண்டாள். மகப்பேறில்லாத

அவள் மகிழ்ச்சிக் கூர்ந்து, குழந்தையை எடுத்து மார்போடணைத்துக் கொண்டாள். ஆற்றல் மிக்க அன்பினால் தாய்மை மீதூரத் தன் மார்பில் சுரந்த பாலூட்டிக் குழந்தையை எடுத்துக் கொண்டு விரைந்து மனைப்புகுந்து கணவனிடம் கொடுத்தாள். எதிர்பாராது கிடைத்த புது மகவோடு மனமகிழ்வுற்ற மாதியனும் மனைவியும் அக்குழந்தைக்கு வீரையன் எனப் பெயரிட்டு வளர்த்தனர். அக் குழந்தை வளர்ந்து வீரர் போற்றும் வீரனாகவும், மங்கையர் மயங்கும் அழகனாகவும் திகழ்ந்தான்.

தொட்டியர் தலைவன் பொம்மணன் பெற்றெடுத்த பொற் கொடியாள் பொம்மி என்னும் பெயருடன் பன்னிரண்டாண்டு நிரம்பிப் பூப்பெய்தினாள். அக்கால வழக்கப்படி, வீட்டிற்குப் புறத்தே தூரத்தில் தனிக்குடிசை கட்டி அதில் பொம்மியை இருத்தி மாதியச்சின்னானைக் காவலுக்கமர்த்தினான் பொம்மணன். ஏவலால் காவல் மேற்கொண்ட முதிய மாதியச்சின்னான் பெருமழை காரண மாக ஒரு நாள் காவலுக்குச்செல்லாமல் தன் மகன் வீரையனை அனுப்பினான்.

காவலுக்குச்சென்ற வீரையன் பொம்மியொடு புரிந்த நீண்ட விவாதத்திற்குப்பின்னர் அவள் இசைவோடு கூடி உடலாலும் ஒன்றுபட்டு இன்பம் துய்த்தான். அடுத்த நாளும் அவ்வாறே தன் தந்தையின் அனுமதியோடு பொம்மி காவலுக்குச் சென்று இன்பத் தில் திளைத்தான். மறுநாள் பொம்மியின் குடிசை வாழ்வு நீங்க, வீட்டிற்கு அழைத்துச் செல்லப்பட்டாள். பொம்மணன் வீட்டில் பூப்பு நீராட்டு விழாவும் விருந்தும் நிகழ்ந்தன. பொம்மிக்குத் தைத்த செருப்புடன் தன் தந்தையோடு விழாச்சோறு வாங்கச் சென்ற வீரையன் தன் காதலியைக் கண்டு மகிழ்ந்தான். காதலர் இனித் தனித்துக் காணும் வாய்ப்பு இன்மையாலும், இக்காதலை யாரிடத்தும் கூறமுடியாதாகையாலும், பெற்றோர்க்குத் தெரியாமல் இருவரும் புறப்பட்டு எங்காவது சென்று மணந்து வாழ்வது என்று முடிவு செய்தனர்.

பொம்மியைச் சிறையெடுத்துச் செல்லும் முடிவுடன் வீரையன், இரவில் கோட்டைக் காவல்களைக் கடந்து பொம்மியின் இருப்பிடம் புகுந்தான். இறைவன் அளித்த வரபலத்தால், உருமாறி வீட்டினுட் புகுந்து பொம்மியை அழைத்துக்கொண்டு அவளைப் பொம்மண னுடைய புரவியில் ஏற்றிச் சென்று விட்டான். செய்தியறிந்த பொம்மணன் உளங்கொதித்துப் படையுடன் வீரையனைத் தேடித் தென்திசை நோக்கி வருகின்றான்.

ஓராற்றின் இடையில் தனிக்கூடாரம் அமைத்துப் பொம்மியொடு தங்கியுள்ள வீரையனைக் கண்டு அவனோடு போர் புரிந்தான்

பொம்மணன். போரில் பொம்மணனும் படைகளும் அழிந்தனர். தந்தை இறப்புணர்ந்து தளர்வுற்ற பொம்மிக்கு ஆறுதல் கூறி அழைத்துச் சென்ற வீரையன் திருச்சிராப்பள்ளியடைந்து அப்போது அதனை ஆண்ட விஜய ரெங்க சொக்கலிங்க நாயக்கரிடம் காவற் பொறுப்பேற்றுப் பணி புரியலானான். காதலும் கடமையும் கட்டியம் கூற வீரையன் திருச்சியில் இருக்கும் நாளில், மதுரை மன்னர் திருமலை நாயக்கர் கள்ளர் தந்த தொல்லையைத் தீர்க்க உதவி வேண்டி விஜய ரெங்கர் பால் தூதனுப்பினார். மன்னன் ஏவலால் திருமலைநாயக்கருக்குப் படைத்துணையாக வீரையன் மதுரை சென்றான். மதுரை நகரைக் கொள்ளையடித்துக் கொடுமை புரிந்த கொள்ளையர் கூட்டத்தினை வீரையன் விரட்டியடித்து வென்றான். வாகை சூடி வந்த வீரையனுக்குத் திருமலை நாயக்கர் வீரவரவேற்பு நல்க ஏற்பாடுகளைச் செய்தார். மீனாட்சியம்மனுக்குப் பணிசெய்யும் பாவையர் உள்ளிட்ட பலரை ஆலத்தி சுற்றி வீரையனை வரவேற்க அனுப்பினார். மீனாட்சியம்மன் பணிப்பெண்களில் வெள்ளையம்மாள் என்னும் கன்னியின் மீது வீரையன் மனம் செலுத்தினான். அவளைச் சிறையெடுப்பதற்காக இரவில் அவள் இருப்பிடம் சென்று அவளைக் கட்டித் தூக்கிக் கொண்டு மாளிகை கடந்து செல்ல முற்படுகையில் காவலர்களால் வீரையன் பிடிக்கப்பட்டான். அவர்கள் திருடன் எனக்கருதி வினவ ஒன்றும் கூறாதிருந்தமையால், அவன் திருடனே என நினைத்து மாறுகை மாறுகால் வாங்கி விட்டனர்.

விடிந்தவுடன் செய்தி அறிந்து அனைவரும் வருந்தினர். வீரையன் பால் பரிவு மிகக்கொண்ட திருமலைநாயக்கர் உண்மையறிந்து மீனாட்சியம்மனிடம் வேண்டிக் கொள்ள, வீரையன் வெட்டுண்ட கை கால் வளரப் பெற்றான். வீரையன் திருமலை நாய்க்கர்பால் சென்று ஆறுதல் கூறி, வினைப்பயனால் தான் இறக்க விருக்கும் நிலைமையினை விளக்கினான், பொம்மியும், வெள்ளையம்மாளும் தீப்புகுந்து உயிர் துறந்தனர். வீரையன் மீனாட்சியம்மனிடம் சென்று வழிபாட்டின் போது முதல் மாலையும் மரியாதையும் பெறும் உரிமை பெற்றுப் பின் கத்தியால் தன் தலையை அறுத்துக்கொண்டு உயிர் விட்டான்.

இறந்தபின் அவனை யாரும் கவனிக்காது விடவே வீரையன் அம்மனிடம் முறையிட்டான். அம்மனுடைய கூற்றுப்படியே வீரையன் அரண்மனை மக்கட்குத் தீங்குகள் இழைத்தான். அரசன் வேண்டிக்கொள்ள அம்மன் அருள் புரிந்தவாறு, ஊரெங்கும் விழா எடுக்கப்பெற்று, அதில் முதல் மாலை மரியாதை வீரையனுக்கு வழங்கப்பெற்றது. மீனாட்சியம்மன் திருக்கோயில் கம்பத்தடியில் இடம் பெற்று வீரையன் தெய்வமாக விளங்கலானான். அம்மன் அருளால் தெய்வநிலையுற்ற வீரையன் திருச்சிக்கு வந்து விஜய ரெங்க மன்னனுடைய வழிபாட்டையும் ஏற்று விளங்கினான்.

வீரையன்பற்றி நூல்களால் அறியும் பொதுவான வரலாறு இதுவே. தெய்வமாக ஏற்றுக்கொள்ளப்பட்ட நிலையில் இவ்வரலாறு பல்வேறு வகையில் தெய்வத்தன்மை ஏற்றப்பட்டு வாய்மொழி இலக்கியத்தில் வழங்கப்பெற்று வருகின்றது.

**வரலாற்றுத்திறன் :**

மதுரை மக்கள் கொள்ளையர்களால் அடைந்த துன்பத்தை நீக்கியமையால், மதுரை மன்னர் திருமலைநாயக்கரிடத்தும், மதுரை மக்களிடத்தும், வீரையன் என்னும் மதுரை வீரனுடைய புகழ் பெருகிப் பரவியது. இறந்த பின்னர்ப் பிறமகளிரை விரும்பிய குற்றத்தையும் புறக்கணித்து, ஒரு தெய்வமாக மதித்து மக்களால் போற்றப்படும் நிலையினை வீரையன் எய்துகின்றான். வீரையன் வழிபாடு தொடக்கத்தில் மதுரையிலும் அதனைச் சார்ந்த பகுதியிலும் பரவிப் பின்னர்த் தமிழகத்தின் வேறுசில பகுதியிலும் கால் கொண்டது. இவ்வழிபாடு செல்வாக்கு மிக்க நிலையில், வழிபாட்டுத் தலைவன் பேரில் நாட்டுப்பாடல் தோன்றியிருக்க வேண்டும் கூறுவோர் வாயும், கேட்போர் செவியும் வாயில்களாகக் கொண்டு வாழும் தன்மை வாய்ந்த கதைப் பாடலாக வீரையன் வரலாறு அமைக்கப்பட்டதால், இட கால மாறுபாட்டிற் கேற்ப வரலாறும் சிற்சில மாறுபாடுகளை எய்தியது. மதுரை வீரனைத் தெய்வமாகக் கொண்டமையால் அத்தெய்வத் தன்மையை வலியுறுத்தும் வகையில் பற்பல தெய்வாம்சங்கள் வரலாற்றில் இடம்பெறலாயின. தெய்வாம்சத்தை விளக்க எழுந்த செயல்களினால் இக்கதைப் பாடல்களில் வரலாற்றுத் தன்மை குறைந்து 'புராணத் தன்மை' மிகலாயிற்று. அதனால் இவ்வகைப் பாடலில் பொதிந்துள்ள வரலாற்றுண்மைகளைத் தூலமாக அறியக் கூடுமேயன்றி, நுட்பமாக அறிதல் இயலாது. இவ்வகையில் மதுரை வீரன் பற்றி அமைந்துள்ள கதைப் பாடல்களனைத்தும் ஒரு பொருள் நுதலிய பல்வேறு இலக்கியங்களாகவே திகழ்கின்றன.

வீரையன் மாதியச் சின்னான் வீட்டில் வளர்வதற்கு முன்னர்க் காசி நகர் மன்னனுக்குக் குழந்தையாய்ப் பிறந்தான் என்றும், சோதிடர் கூற்றால் கானகத்தில் விடப் பெற்றான் என்றும், எல்லா ஏடுகளும் ஒன்று படக் கூறப்பட்டுள்ளன. ஆனால் காசி மன்னன் பெயர் ஓரேட்டில் நாராயணர் என்றும், மற்றோரேட்டில் துளசிராசர் என்றும், பிறிதோரேட்டில் பராச வேந்தன் எனப்பொதுவாகவும் கூறப்பட்டுள்ளது.

கானகத்தில் குழந்தையை எடுத்து வளர்த்த மாதியச்சின்னான் காசியில் இருந்தவன் என்றும், தானெடுத்து வளர்க்கும் செய்தி அறிந்தால் அரசன் குழந்தையைக் கைப்பற்றிக் கொல்லக்கூடும்

என்று கருதித் தெற்கே வெகுதொலைவிலுள்ள பொம்மண நாய்க்கர் நாட்டிற்குப் போய்ச் சேர்ந்தான் என்றும் ஓரேடு கூறுகின்றது. மற்ற ஏட்டில், மிகத்தொலைவிலிருந்த பொம்மண நாய்க்கன் நாட்டுக் கருகிலுள்ள காட்டில் குழந்தையை விட்டதாகவும், பட்டை வெட்டக் காடு சென்ற மாதியனின் மனைவி குழந்தையை எடுத்து வந்த தாகவும் கூறப்பட்டுள்ளது. பொம்மண நாய்க்கனூர் எது என்று அறியக்கூடவில்லை. வீரையனுடைய வளர்ப்புத் தந்தையையும், அவர்தம் புரவலரையும் நோக்குமிடத்து அவர்கள்தம் தாய்மொழி தெலுங்காக இருத்தல் வேண்டுமென்று ஊகிக்க இடமுண்டு. ஆனால் இது பற்றிய குறிப்பு எந்த ஏட்டிலும் காண இயலவில்லை.

வீரையன் பொம்மியைச் சிறையெடுத்துத் திருச்சிராப்பள்ளி வந்து அதனை ஆண்ட விஜயரெங்க சொக்கலிங்க நாயக்கர் பால் சேவுகம் பூண்டு திருச்சி நகரில் தங்கியிருந்தான் என்பதனாலும், அவர் கட்டளைப்படி மதுரைக்குச்சென்று அப்போது அரசு செய்த திருமலை நாயக்கருக்கு உதவி புரிந்தான் என்பதனாலும் இவனுடைய காலம் திருமலை நாயக்கரின் காலமேயாகும் என்பது உறுதியாகின்றது. அவராண்ட காலம் கி.பி. 1623 முதல் கி.பி. 1659 முடியவாகும் என்று வரலாறு கூறுகிறது.

பாடற் செய்திகளை நோக்குங்கால், வீரையன் உயர்ந்த குலத்தில் பிறந்து தாழ்ந்த குலத்தவரால் வளர்க்கப்பட்டவன் என்பதும், மாதியச்சின்னான் என்னும் சக்கிலியன் இவனுடைய வளர்ப்புத்தந்தை ஏன்பதும், திருச்சியை ஆண்ட விசய ரெங்க சொக்கலிங்க நாயக்கர் மதுரையை ஆண்ட திருமலை நாயக்கர் ஆகியோர்க்குச் சேவகம் புரிந்தான் என்பதும், மதுரையைத் துன்புறுத்திய கொள்ளையரின் கொட்டமடக்கித் திகழ்ந்தான் என்பதும், ஒரு பெண்மீது கொண்ட பெருந்திணைக்காம முயற்சியின் பயனாக மதுரையில் அகால மரணம் எய்தினான் என்பதும், இறந்த பின்னர் மதுரை மக்களும் பிறரும் இவனைத் தெய்வமாக ஏற்று வழி படலாயினர் என்பதும் ஆகிய வரலாற்றுச்செய்திகள் புலனாகின்றன.

குழந்தையாகக் கானகத்தில் விடப்பட்ட நிலையில் 'நாகம் குடைபிடிக்க நல்ல பாம்பு தாலாட்ட' வீரையன் வளர்ந்தான் என்றும், இறைவனருளிய வர வலிமையால் ஈ போன்ற உரு மாறுதல் முதலிய ஆற்றல் பெற்று விளங்குகினான் என்றும், இறுதி யில் இறந்த பின்னர் மீனாட்சி அருளால் யாவரும் வணங்க அவர் கட்கு அருள் பாலிக்கும் ஆற்றல் பெற்றான் என்றும் பிற ஏடுகள் கூறுகின்றன. இவனுடைய அதிமானுட ஆற்றலை — தெய்வீக நிலையினை 'வீரையன் அம்மானை' பலவாறாகப் பேசுகிறது. இவ் வேடு கூறும் செய்திகளை நோக்கினால், தெய்வங்கள் பற்றிய நாட்டுப் பாடல்களில் தெய்வாம்சங்கள் எவ்வாறு வளர்ந்தும் பெருகியும் இடம் பெறுகின்றன என்றும் உண்மை புலனாகும்.

ஏனைய ஏடுகள் வீரையன் பிறப்புப் பற்றிக் கூறுகையில் காசி மன்னன் தவப்பயனாக ஓராண்குழந்தை பிறந்தது என்று கூற, சரசுவதி மகால் ஏடு, காசி மன்னர் தம் கடுந்தவத்திற்கு இரங்கிய உமையம்மை சிவபெருமானிடம் அரசனுக்கு அருள் புரியுமாறு வேண்டிக் கொள்ள, சிவபெருமான் ஏவலால் வீரபத்திரதேவர் காசி வேந்தனுக்குக் குழந்தையாக அவதரித்தார் என்றும், தான் மானிடக் குழந்தையாய் மண்ணுலகில் பிறக்குமுன்னரே வீரபத்திரர் இறைவனிடம் பல்வேறு வரங்கள் வேண்டிப் பெற்றார் என்றும், பிறந்த பின்னர்த்தன் எதிர்கால வரலாறு முழுதும் சிவபெருமான் கூறக் கேட்டறிந்தார் என்றும் கூறுகிறது.

மேலும் உமையும் சிவனுமாய் உலகு சுற்றி வருகையில் காட்டில் குழந்தை அழுவது கண்டு உமையம்மை சிவபெருமானிடம் வினவச் சிவன் அம்மைக்குக் குழந்தை வரலாற்றை கூறுவதாகவும் ஏடு இயம்புகின்றது. பொம்மியைச் சிறையெடுத்துச் செல்லுகையில் காளியைச் சந்தித்து, அவள்பால் அருளும் வரமும் அதிகமாக வீரையன் பெற்றான் என்று கூறப்படுகிறது. இவற்றை நோக்கும் போது, தெய்வ சம்பந்தமான நாட்டுப் பாடலில், பாடல் தலைவனுடைய வரலாற்றில் தெய்வாம்சக் கூறுகளைப் பெருக்கியும் புனைந்தும் பேசும் இயல்பு புலனாகின்றது. வாய்மொழியாக வழங்கும் தெய்வம் பற்றிய நாட்டுப் பாடலில் புலவர்கள் இயைக்கும் புராண இயல்பு இடம் பெறுமாற்றையும் இதனால் உணரலாம். வீரையனுடைய முற்பிறப்பு வரலாறு பெரிய புராணத்தில் இடம் பெற்றுள்ள சுந்தரர் முற்பிறப்பு வரலாற்றையும், இராமாயணத்தில் இடம் பெற்றுள்ள இராமன் முதலியோர் முற்பிறப்பு வரலாற்றையும் நினைவூட்டு கின்றது. இந்த வரலாற்றுச் செய்திகளில் அமைந்துள்ள வளர்ச்சி மாற்றங்களால் சரசுவதி மகால் ஏடு, வீரையன் வரலாறு பற்றிய ஏடுகளுள் காலத்தாற் பிற்பட்டதாகக் கருதப்பட்டாலும், தனித் தன்மை பெற்றுக் கதைபொதி நாட்டுப் பாடல்கள் மக்கள் மத்தியில் வளர்ந்து வாழும் தன்மைக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றது. பாமர மக்களின் பக்தி நாட்டமும், கற்பனை வேட்கையும் நாட்டுப் பாடல்களில் அமையும் இத்தகைய வளர்ச்சி மாற்றங்களுக்கு அடிப்படைகளாக அமைகின்றன.

சாதி அடிப்படையிலமைந்த சமுதாய நோக்கில் வீரையன் வரலாற்றை நோக்கினால் உயர்ந்த சாதி எனக் கருதப்படும் சாதியில் பிறந்த பெண்ணைத் தாழ்ந்த சாதியான் என்று கருதப்படும் ஒருவன் காதலித்து, அவள் பெற்றோர் அறியா நிலையில் சிறையெடுத்துச் சென்று மணந்த உண்மை விளங்கக் காணலாம். வீரையனை அவன் தன் வீரச்செயல்களால் பேணிப் போற்றிக் கொள்ளப்பட்ட பின்னர்த் தெய்வமாகப் பேணும் நிலையில், அவன் தாழ்ந்த சாதியிற் பிறந்தவன் எனக் கூற விரும்பாத காரணத்தால், வீரபத்திர தேவர்

பிறப்பு என்றும், காசி நகர் மன்னன் குழந்தை என்றும் முற்பிறப்புக் கூறியுள்ளனர் எனக் கருதத் தோன்றுகிறது. அந்தணர் குலப் பெண்ணுகிய ஆரியமாலையைக் காதலித்துச் சிறையெடுத்து மணந்த காத்தவராயனுடைய பிறப்பும் உயர்சாதியொடு தொடர்பு படுத்தி, அவன் வரலாறு கூறும் நாட்டுப்பாடல் பேசுவது இங்குச் சிந்திக்கத் தக்கதாகும். கலப்புத்திருமணம் பற்றி அன்றைய சமுதாயம் எத் தகைய கருத்துக் கொண்டிருந்தது என்பதனை இவ்வகை நாட்டுப் பாடல்கள் கொண்டு ஒரு சிறிது உணரலாம்.

**வீர வழிபாடு :**

காதலையும் வீரத்தையும் இரு கண்ணெனப் போற்றிய தமிழ்ச் சமுதாயம், தனிமனித வீரத்தை வியந்து அதனைத் தெய்வநிலையில் வைத்து வழிபட்டது. நாட்டிற்காகப் போரிட்டுத் தம் நல்லுயிரை வழங்கிய வீரர் பெருமக்களுக்குக் கல் நாட்டித் தெய்வமாக வழிபாடு செய்யப் பெற்று வந்த செய்தி, பழந்தமிழ் இலக்கணமாகிய தொல் காப்பியத்தாலும், தமிழகத்தின் பல்வேறு இடங்களிலும் கிடைத்த நடு கற்களாலும், அவை பற்றிய கல்வெட்டுக்களாலும் புலனுகின் றது. காலப் போக்கில் தமிழகத்தில் ஏற்பட்ட வேற்றவர் ஆட்சி, சமய மலர்ச்சி போன்ற காரணங்களினுல் இவ்வீர வணக்க முறை, முற்றிலும் அழிந்து விடாது, ஏதோ ஒரு வகையில் தொடர்ந்து வந்துள்ளதை அறிய முடிகின்றது. பட்டவன் என்ற பெயரில் இறந்த தம் முன்னேர்களுக்குக் கற்சின்னம் அமைத்துக் கொண்டாடி வழிபடும் வழக்கம் ஆங்காங்கே இன்றும் காணப்படுகிறது. காத்தவராயன், லாடசன்னசி, மாடசாமி போன்ற சிறு தெய்வங் கள் இவ்வகையில் தோன்றியனவே. இவர்தம் வரலாறுகளை ஆராய்ந்தால், இவர்களில் பலர் தம் வீரச் செயல்களால் மக்கள் உள்ளங் கவர்ந்தவர்களாகவும், இயற்கை மரணம் எய்தாமல் வன் மரணம் எய்தியவர்களாகவும் விளங்கக் காணலாம்.

வீரையன் காம வயப்பட்டு ஒரு பெண்ணைச் சிறையெடுத்த நிலை யில், காவலர்களால் கைகால் வெட்டுண்டு பின்னர் மாண்ட போதி லும், அவன் தன் வீரத்தால் மதுரை நகருக்குச் செய்த பேருதவியை நினைத்துத் தெய்வமாக வழிபடப் பெறும் நிலை எய்துகின்றுன். குணம் நாடிக் குற்றமும் நாடி, அவற்றுள் மிகைநாடி மிக்க கொள்ளும் பாங்கில், வீரையனுடைய சிறுமை புறங்கத்து, சீர் போற்றிச் சிறப்பித்தனர் தமிழ் மக்கள். வீரையன் நினைவில் ஒரு சிறுதெய்வம் உதயமாகித் தமிழகப் பகுதிகளில் அதன் வழிபாடு தழைக்கலாயிற்று. சிறுசிறு கோயில்கள் அமைத்தும் காமாட்சி யம்மன் கோயில் போன்ற பெரிய கோயில்களில் பரிவார தேவதை யாக இடம் தந்தும் வீரையன் நினைவு போற்றப்பட்டது.

## நூற்றிறன் :

தமிழ் இலக்கியங்கள் சிலவற்றிற்கும், உரைகளுக்கும் ஆசிரியர் பெயர் அறிய முடியாதிருக்கும் போது வாய்மொழியாக வழங்கி வந்த நாட்டுப் பாடல்களின் ஆசிரியர் பெயர் அறியக் கூடாமலிருப்பதில் வியப்பில்லை. வீரையன் அம்மானையின் ஆசிரியர் பெயரும் தெரியவில்லை. இதன் ஆசிரியர் விநாயகர் காப்பொடு நூலைத்தொடங்கியுள்ளார். வீரபத்திரதேவரை வீரையனைப் பிறக்கச் சிவபெருமான் கட்டளையிட்டதாக இந்நூலாசிரியர் கூறுவதால் அவர் சைவ சமயச்சார்புடையவர் என்று கருதலாம். விநாயகர், முருகன், கலைமகள் முதலிய தெய்வங்களை வணங்குவதோடு, சாமுண்டி, காளி, காட்டேரி ஆகிய தெய்வங்களை வழிபடுவதாலும், பாட்டுடைத்தலைவனை ஒரு சிறு தெய்வத்தைக் கொண்டதாலும், இவர் சிறு தெய்வ நம்பிக்கையும் கொண்டவர் என்று எண்ணலாம்.

மதுவும் புலாலும் படைத்து வழிபடும் மதுரை வீரன் வழிபாட்டினை இன்றும் காணலாம். மதுவிலக்குச் சட்டத்தால் ஒரு வேளை மதுப்படைப்பு மறைந்திருக்கலாம். இச்சட்டம் வருமுன்னர்ப் பெரும்பாலான மதுக்கடைகளில் மதுரை வீரன் திருவுருவப்படம் வைத்து வழிபடப்பட்டது. மதுரை வீரன் ஊனும் மதுவும் உகப்பவராக மக்களால் கருதப்பெற்றிருந்தும், இந்நூலில் உணவு பற்றிக் கூறியுள்ள பலவிடத்தும், அவை பற்றிய குறிப்பு எதுவும் கூறப்படாதது குறிப்பிடத்தக்கது. வீரையன் பற்றிய வேறு நூல்களில் புலால் உணவும், மது பற்றிய குறிப்பும் இடம் பெற்றுள்ளன. விநாயகர் வணக்கம் கூறும் போது 'கொல்லிமலை கனிவர்க்கம் கொண்டருளும் பிள்ளையாரே' எனக்கூறியிருத்தலாலும், திருச்சிராப் பள்ளியைச் சுட்டுமிடத்து அல்லித்துறை, சிங்காரத்தோப்பு, தெப்பக்குளம் முதலியன குறிப்பிடப்பட்டிருத்தலாலும் இப்பாடலின் ஆசிரியர் திருச்சிராப்பள்ளியை நன்கறிந்த, அவ்வட்டாரத்தைச் சேர்ந்தவராக இருத்தல் கூடுமென என்று துணியலாம்.

## நாட்டுப்பாடலியல்புகள் :

நாட்டுப்பாடல்கள் வாய்மொழிச் செல்வமாக அமைவதால் கேட்போரைக் கவரவல்ல ஓசைச்சிறப்பு அவற்றின்கண் தவறுது பொருந்தியிருத்தல் வேண்டும். ஓசைச்சிறப்பு என்று கூறும்போது, நுணுக்கங்கள் நிறைந்த இசை நுட்பத்தினைக் கொள்ள வேண்டியதில்லை. இசை ஞானம் மிகுதியும் இல்லாத பாமர மக்களைக் கவரும் வகையிலான ஓசைச்சிறப்பு இருத்தல் வேண்டும். இவ்வகை

நாட்டுப்பாடலின் ஆசிரியர்கள் தங்கள் படைப்பில் ஓசை தவருமை பற்றி மிகவும் கருத்துடையவர்களாக இருப்பர். வீரையன் அம்மானை ஆசிரியரும் கலைமகள் வாழ்த்துக் கூறுகையில்,

*" ஆயி சரஸ்வதியே அடியேன்தன் நாவில்நின்று*
*என்னுவில் சரஸ்வதியே எந்நாளும் குடியிருந்து*
*நாவு தவருமல் நல்லோசை குன்ருமல்*
*ஏடு தவருமல் எழுத்தாணி சாயாமல் "*

அருள வேண்டுமென்று வேண்டுகிருர். மேலும்

*' நாவு தவருமல் நல்வாக்குக் குன்ருமல் '*

என்று மீண்டும் வேண்டுவதாலும் இதனை உணரலாம்.

சில தொடர்களும் வரிகளும் திரும்பத் திரும்பக் கூறப்படுவது நாட்டுப் பாடலியல்புகளில் ஒன்ருகும். ஆடை அலங்காரம் செய்வதாகக் கூறுமிடங்களில் 'கச்சை வரிந்துகட்டிக் கருங்கச்சை சுங்கு விட்டு' என்னும் தொடர் பன்முறை இடம் பெற்றுள்ளது. பலவிடங்களில் மீண்டும் இடம் பெறும் வரிகளிற் சில வருமாறு :—

*' பரங் கிக்காய்ப் பச்சடியும் பாவக்காய் புளிக்கறியும் "*
*" தொட்ட மிதியடியும் சுண்டு வில்லும் கைப்பிடித்து "*
*" இடது புறம் சுங்கிலேதான் ஏமனுட அட்சரமும்*
*வலது புறம் சுங்கிலேதான் வடமலையான் அட்சரமும் "*

ஓசைக்காக அசை, சீர்களைச் சேர்த்து அடியினை நிறைவு செய்தலை இவ்வகைப் பாடலில் பரக்கக் காணலாம்.

*" ஒராந்தான் திங்களிலே "*
*" அஞ்சாந்தான் திங்களிலே "*
*" ஏழாந்தான் திங்களிலே "*

தொடர்களில் தான் எனும் அசை சேர்ந்து ஓசை நிறையுமாற்றை உணரலாம்.

கதை பொதி நாட்டுப் பாடல்கள் ஆசிரியப் பாவைப் போன்ற யாப்பில் அடிகளின் எண்ணிக்கை வரையறையின்றி அமைக்கப் படுகின்றன. இதனை 'நடை' என இவ்வகை யாப்பிலமைந்த நூல்கள் குறிக்கின்றன. இந்த 'நடை' யில் எதுகை மோனைச் சிறப்பு எங்கேனும் மாறுபட்டால், பெரும்பாலும் அது ஏடு பெயர்த் தெழுதுவோர் பிழையாகவே அமையும். ''வெள்ளிமலை ஈஸ்பரனை அவனைப் பணிந்து'' என்னும் வரி இவ்வகையில் அமைந்த பிழை பட்ட வடிவமே யாகும்.

நாட்டுப் பாடல்களும் ஏட்டுப் பாடல்களைப் போலவே அணி நலஞ் சான்றும், கற்பனை வளம் சிறந்தும் அமைந்திருக்கக் காணலாம். குழந்தை வீரையனை வருணிக்கும் போது,

*" வஞ்சிக் கொடிபோலே வாகான தன்னிடையும்*
*ஆடும் தொடை யிரண்டும் அடிவாழைத் தண்டது போல்*
*கைகளும் தானும் சனத்த தொரு வாளது போல்*
*குளத்து விராலது போல் கொற்றவனார் தன் காலாம் "*

என வரும் உவமைகளில் எளிமையும் பொருத்தமும் நாட்டுப்புற மணமும் பொலியக் காணலாம். பொம்மியை அலங்கரிப்பவர்கள் கண்ணிற்கு மையிடுகின்றார்கள். அதனை இந்நூல், 'கருங்குருவி வாலது போல் கண்ணுக்கு மையெழுதி' என உவமைப் படுத்திக் கூறுகின்றது.

தவப் பயனாய்ப் பெற்ற குழந்தையைக் காட்டில் தனியே போட்டு விட வேண்டும் எனக் கேட்ட தாயின் இதயக்குமுறலை

*" காட்டிலே என்குழந்தை கதறி அழுவதற்கு*
*நாட்டிலே என்னபழி நான் செய்தேன் பிரம்மாவே "*

என்று அழகியதோர் உணர்ச்சிச் சித்திரமாக அம்மானை வெளியிடுகிறது. 'கொடுப்பாரே அல்லால் கொள்வாரொருவரில்லை' எனக் காசி மாநகர் வளம் கூறும் பகுதியில், ''வண்மையில்லையோர் வறுமை இன்மையால் என்றும் கம்பச்சித்திரத்தின் சாயலைக் காண முடிகின்றது.

இவ்வாறு வீரையன் அம்மானை நாட்டுப் பாடலின் எழில் நலங்கள் அனைத்தும் கொண்டிலங்குகின்றது. மதுரைவீரன் வரலாறு கூறும் பிறநாட்டுப் பாடல்களினின்றும் பலவகையிலும் மாறுபட்டு விளங்கும் வீரையன் அம்மானையின் முழுப்பகுதியும் கிடைக்காமை பெரிய குறையேயாகும். எனினும் இந்நூல் ஏனையவற்றினும் தனித் தன்மை பெற்று விளங்குவதோடு, நாட்டுப்பாடலாராய்ச்சிக்கு மிக்க துணைபுரிவதாகவும் அமைந்திருப்பது மனநிறைவளிக்கிறது.

தமிழிலுள்ள எந்த அம்மானைப் பாடல் தலைவரையும் பற்றி மூன்று நாட்டுப் பாடநூல்கள் அமைந்திருப்பதாகத் தெரியவில்லை. வீரையன் மீது மூன்று நாட்டுப் பாடல்கள் அமைந்துள்ளன. அவற்றுள் வீரையன் அம்மானை கதை நிகழ்ச்சியிலும், கற்பனையிலும் பல வேறுபாடுகளைக் கொண்டிருப்பதால் நாட்டுப் பாடல் வளர்ச்சி வரலாற்றினை ஆராய்வார்க்கு இஃது அரியதொரு கலைச்சுரங்கமாகும். இதனை வெளியிட்டதனால் சரசுவதி மகால் நூலகம், தமிழ் நாட்டுப் பாடலாராய்ச்சிக்கு அரிய தொண்டு செய்ததாகிறது.

நாட்டுப்பாடலில் பாமரர் வழக்கில் இடம் பெறும் கொச்சைச் சொற்களும், வட்டார வழக்கும் இடம்பெறல் இயல்பாகும். அத் தகைய சொற்களை, அவற்றின் சரியான வடிவத்தில் வெளியிடாது, ஏட்டில் உள்ளபடியே வெளியிட்டுள்ளோம். நாட்டுப்பாடல் ஏட்டில் இடம் பெறும் பொழுது பாமரர் வழக்கு வடிவங்களை மாற்றி அமைத்தல் நாட்டுப்பாடலியக்கத்திற்குச் செய்யும் கொடுமையாகும்.

ஓலைச்சுவடியில் எழுதப்பட்ட போது நேர்ந்த எழுத்துப் பிழைகளை மட்டுமே திருத்தி நூல் வெளியிடப்பட்டுள்ளது. வேறு வகையாகத் திருத்தினால், எதுகை மோனை சிறந்து அழகாகப் பாடல் விளங்கும் என்று தெரிந்த போதிலும், அதனை அவ்வாறு மாற்றாமலே பதிப்பித்துள்ளோம். ஏட்டுப் பிழையால் பொருள்தெளிவு படாத பகுதிகள் சிலவற்றை அவ்வாறே பதிப்பித்து, அடிக்குறிப்பில் அது பற்றிக் குறிப்பிட்டுள்ளோம். ஏட்டில் எழுத்துச் சிதைந்துள்ளவிடங் களிலும் படிக்க முடியாத சில இடங்களிலும் அவ்விடங்களிலுள்ள சொற்கள் இவையாகும் என்று ஊகித்தறிந்தவிடத்து, அவ்வாறு அறிந்த சொற்கள் பிறைக்கோட்டிடை இட்டுக் காட்டப்பட்டுள்ளன.

முற்றிலும் சொல்வடிவம் கண்டுகொள்ள முடியாத இடங்கள் ''......'' என்று புள்ளிகள் வைத்துக் காட்டப்பட்டுள்ளன. கதைத் தொடர்பில் இடையீடு பட்டுள்ள விடங்கள் ஃ ஃ என்ற குறியிட்டுக் காட்டப்பட்டுள்ளன.



# வீரையன் அம்மானை

## காப்பு

பார்புகழும் வீரையன்மேல் பண்புடனே அம்மானை
நேராக யான்பாட நித்தியமும் — கார்நிறத்தோன்
தொந்திவயி றைந்துகரத் தும்பிமுகத் தந்தையெனும்
கந்ததுணைக் குஞ்சரமும் காப்பு.

## கடவுள் வாழ்த்து :

கணபதி நமாவென்றால் கலங்குமே வல்வினைகள்
கணபதி நமாவென்றால் காலனுங் கைதொழுவான்
கணபதி நமாவென்றால் கருத்துமிக வுண்டாகும்
கணபதி நமாவென்றால் கருமங்கள் தான்தொலையும்
கணபதி நமாவென்றால் கருமவினை தானகலும் 5

கணபதி நமாவென்றால் கண்டமுனி தெண்டனிடும்
கணபதி நமாவென்றால் கடும்பாவ மெய்யகலும்
விநாயகா என்றவர்க்கு 1விக்கினங்கள் வாராவே

1. குறைகள்

அய்யன் கணபதியே ஆதிசிவன் புத்திரனே
பார்வதியாள் புத்திரனே பாலகனே [1]குஞ்சரமே 10

காமாட்சி பெற்றெடுத்த கண்ணே நவமணியே
[2]சாலாட்சி யீன்றெடுத்த சாலைக்கரைப் பிள்ளையாரே
(வழிக்கரை) வாழும் வடிவுள்ள பிள்ளையாரே
ஆலடியில் பிள்ளையாரே அரசடியில் விநாயகனே
வேலடியில் பிள்ளையாரே வேறுவினை வாராமல் 15

காலில் சிலம்பசையக் கைச்சதங்கை ஓசையிட
ஓசையிடப் பொற்சதங்கை ஓடிவாரும் பிள்ளையாரே
ஓடிவந்து என்னெஞ்சில் உறுதியாய்க் [3]காருமையா
தும்பிக்கை யானைத் தொழுதிறைஞ்சிப்
போற்றுகிறேன்
நம்பிக்கையாக நாயனுக்கு வாக்கருள்வாய் 20

அச்சமது தீர்த்தருளும் ஆனைமுகப் பிள்ளையாரே
[4]பச்சம் வைத்தோரைக் காக்கும் பரமனார் ஈன்றோனே
இருண்டாலின் கீழிருந்து எண்ணமதந் தான்பொழியும்
தழஞ்சாலின் கீழிருந்து தண்ணிமதந் தான்பொழியும்
படைத்தாலின் கீழிருந்து பானை வயிற்றோனே 25

நம்பிக்கை யாக நாயனுக்கு வாக்கருள்வாய்
எளளுப் பொரியுருண்டை இனிப பலாச் சுளையும்
வாழைக் கனியும் மாங்கனியும் தேங்கனியும்
தேங்காய் கரும்பு தித்திக்கும் சர்க்கரையும்
அதிரச வெல்லமுடன் அப்பளமும் பணியாரமும் 30

வடை பருப்பு பச்சரிசி வாகான செங்கரும்பு
கற்கண்டு சீனி கடலை யவல் பொரியும்
கொல்லிமலைக் கனிவர்க்கம் கொண்டருளும்
பிள்ளையாரே
தேசக் [5]கனிவர்க்கம் தெவிட்டா துணவுகொள்ளும்
வாரியமுது கொள்ளும் வழிக்கரையிற் பிள்ளையாரே 35

---

1. விநாயகர் 2. விசாலாட்சி 3. காப்பாற்றும்
4. அன்பு 5. பழவகைகள்.

நம்பினேன் உன்பாதம் நாயடியேன் எந்நாளும்
அம்மானை பாடுகிறேன் அப்புவியோர் கொண்டாட
ஆயி சரஸ்பதியே அடியேன்தன் நாவில்நின்று
என்னுவில் சரஸ்பதியே எந்நாளுங்குடியிருந்து
நாவு தவறாமல் நல்லோசை குன்றாமல் 40

நாவில் குடியிருப்பாய் நல்ல சரசுபதியே
ஏடு தவறாமல் எழுத்தாணி சாயாமல்
அங்கயற்கண் மீனாட்சி அம்மாள் துணையென்றே
எங்கெங்கும் கீர்த்தியா யியம்புகிறேன் அம்மானை
சொல்லுங் கவிதைக்குச் சொற்பிழைகள் வாராமல் 45

முன்னிற்க வேணும் [1]முக்கண்ணாள் புத்திரனே
சென்னிக்குள் நின்று சிரோமணியே காத்தருள்வாய்
[2]கங்குல் விடியக் காவேரி பொங்கி வர
செங்கண் நெடுமால் திருத்தாள் சரணமென்றேன்
எந்தனுடை வாக்கில் எப்போதும் நீ யிருந்து 50

வந்ததொரு தீவினையை வாகாகத் தீர்த்துவைப்பாய்
கந்தா முருகா கனத்ததொரு வேலோனே
வந்துதவி செய்வாய் மால்மருகா இப்போது
சத்திய மேவு மாரி சாமுண்டி மாகாளி
துர்க்கை பகவதியே தோற்றமுள்ள காட்டேறி 55

மம்புட்டிப் பள்ளி மழுவேந்துங் காளியம்மாள்
சுட்ட பிணந் தின்றும் [3]சுடலைவனங் காத்தவளே
ஏந்திய [4]கபாலம் எடுத்ததிருக் கைச்சூலம்
எத்திய வயிறும் [5]ரேகமெல்லாம் வெண்ணீறு
வாயிலே அஞ்சுபிணம் வலதுகையி லேழுபிணம் 60

பச்சைப் பிணத்தைப் பால்வடியத் தின்றவளே
மிஞ்சிய பிணத்தை மிதியடியாய்த் தொட்டவளே
சடையால் பெருத்தவளே தாயே தயாபரியே
உந்தனையும் நம்பியொரு அம்மானை பாடுகிறேன்
வந்தென்னைக் காத்து வரந்தர வேணுமம்மா 65

---

1. சங்கரி 2. இரவு 3. சுடுகாடு 4. மண்டையோடு
5. திரேகம்-உடல்

மதுரை துரைபேரில் வரிசையுடன் நான்பாட
விறு சேர் கலித்துறையும் விருத்தமுடன் கொச்சகமும்
கழிநெடில் வெண்பா கலந்துமிக வுரைக்க
சிந்து போற் காற்சிந்து தெம்பாங்குத் தாறுரைக்க
வந்துதவி செய்வாய் மதுரை மீனாட்சியம்மாள் 70
பதும தன மாது [1]பங்கனே காத்தருள்வாய்.

## விருத்தம்

சீர் தங்கு திருப்பதி யென்றும்
சிறப்புறு மலையில் வாழும்,
பாரெங்கும் போற்றி செய்யப்
[2]பாம்புமேல் பள்ளி கொள்ளும்
சீரெங்க மணியே சோதி
நித்தியகல் யாணி வாசா
ஊரெங்குந் துதித்த பேர்க்கு 75
உண்டென ரட்சிப் பாயே !

## நடை

ஆதி சிவனே அய்யனே சாம்ப சிவா
பாதங் கழுவிப் பன்னீரால் முகந்துடைத்து
மல்லிகைப் பூச் செண்பகப்பூ வாய்த்த இருவாச்சி முல்லை
வண்ண மாயிரம் [3]பொற்பம் மலரடியில் தான் சொரிந்து
காணுகிறேன் உன்பாதம் [4]கனக முடிவணங்கிச் 80
சிந்தனைகள் வாராமல் சிவனே சரண மையா.
தாயே தயாபரியே சங்கரியே உன்பாதம்
நானடியேன் போற்றுதற்கு நல்லபத மெனக் கருள்வாய்
தக்கனுட யாகமதில் தானுதித்த ஈஸ்பரியே

1. மாது பங்கரனே என உள்ளது
2. ஆதிசேடன்
3. பொற்பம் - மலர்
4. தங்கம்

மிக்க துணையா யிருந்து வேறுவினை வாராமல் 85
காத்தருள வேணும் காரணியே எந்தாயே
நம்பினேன் றுன்பாதம் தாயே சரணமம்மா
தஞ்சமென்றே றுன்பாதம் தாயே சரணமம்மா
வீரையன் மேல் பாடுதற்கு விதமாய் வரமருள்வாய்
(மா தே) வர் வேர்வையினுல் வந்துதித்த
வீரபத்திரன் 90

(பதினெ) ட்டு ஆயுதமும் பாங்காகவே எடுத்து
தக்கனுட 1சிரசைத் தானறுத்த விரபத்திரன்
அங்காளம்மன் வாசலுக்கு அதிவீரன் முத்தையனே
உந்தனைப் போற்றிசெய்து ஓரம்மானை பாடுகிறேன்
வந்தென்னைக் காத்து வரந்தர வேணுமம்மா 95

2வேதப் பிராமணத்தி மெல்லியரே நம்பினேன் நான்
நூலா இழைத் தெடுக்க நூற்றெட்டுக் காளிகளும்
வந்து நிற்க வேணுமம்மா உன் மலரடியைப்
போற்றுகிறேன்
எழுதுகிறேன் அம்மானை என்னெஞ்சில் வந்துதிப்பாய்
(வடிவம) லையாண்டி வன்ன கருப்பண்ண நீ 100

(கொல்லி) மலைபாளி கொடியமுள்ள சன்னசி
(கானக்) குதிரையின் மேல் கல்லணையும் சீனீ
வைத்து
முப்பத்து முக்கோடி தேவர்களை நம்பினேன் நான்
கின்னரர் கிம்புருடர் கெந்திருவர் இந்திரர்கள்
சித்தியா தரரே உன் சீர்பாதம் நான் மறவேன் 105

ஆயிரம் கண்ணுடையாள் ஆதி சக்தி பொன்மாரி
சக்தி உமையவளே தாயே சரசுபதியே
எல்லோருந் துணையாய் எழுதுகிறேன் அம்மானை
அங்கயற் கண் மீனுட்சி அம்பிகையே உன்பாதம்
அஷ்டாட் சரப் 3பொருளே அபிராமி காரணியே 110

---

1. தலை 2. கொற்றவை
3. ஓம் நமோ நாராயணு என்னும் மந்திரப் பொருளாக விளங்கும் இறைவன்

நாவு தவறாமல் நல்வாக்குக் குன்றாமல்.
ஏடு தவறாமல் எழுத்தாணி சாயாமல்
பழுதுகளும் வாராமல் பார்வதியும் காத்தருள்வாய்
நெஞ்சில் தியானம் நிச்சயம் தப்பாமல்
வேணுமடி தாயே வேதாந்த நாயகியே 115

பண்ணாத குற்றம் பனையளவு செய்தாலும்
வஞ்சனைகள் பில்லி வைப்புமலம் தான்தீர்த்துக்
காக்கக் கடனுமையா கர்த்தாவே தென்மதுரை
சுவாமியுட ஸ்தோத்திரம் முடிழ்த்து முற்றும்

**காசி மாநகர்**

## விருத்தம்

மாடங்கள் கோடி கோடி
மண்டப மனேகங் கோடி
ஆடலும் பாடல் கூத்தும்
1அரம்பையர் நடன மாட
நாடெலா மாரி பெய்ய
நறுமலர் பூத்தி ருக்கும்
தேடவுங் கிடையாத் 2தீர்த்தம்
செழித்திடும் நகரந் தானே. 1

வேதமும் புராண சாத்திரம்
விளங்கவே நெறிய தாகி
மாதமும் மாரி பெய்து
வானக (முரம்ப) முத்தி
தாத நாதாக்கள் இந்திரன்
3நான்முகன் துதித்துப் போற்றும்
நீதற மொழியும் தேவர்
செழித்திடும் நகரந் தானே 2

என்னவே முடியா லிங்கம்
இடைவிடா திருந்த லிங்கம்

---

1. தேவமாதர் 2. புனித நீர் 3. பிரம்மா

மன்னிய தெய்வ கன்னி
மிகுந்திடும் மறையோர் ஞானம்
மன்னவர் ஞான சித்தில்
மலிந்த [1]சித்தியர் வித்தியர் 130
இன்னமும் தழைத்து வாழ்ந்து
இருக்குமிந் நகரந் தானே. 3

## நடை

வடக்கே வடதேசம் வைகுண்ட பதவியைப் போல்
கங்கை நதியும் கைலாச தீர்த்தமுமாய்
விசுவநாதர் சன்னதியும் வெண்முதலால் கோபுரமும்
ஆலயத் திருமதிலும் [2]அபரஞ்சி கோபுரமும் 135
பச்சை மரகதத்தால் பளிங்குமா மண்டபமும்
இரத்தினம் பதித்ததொரு நாகரிக மண்டபமும்
ஒன்பது இரத்தினவகை உள்ளதொரு சன்னதியில்
தூண்டா விளக்கெரியும் [3]சொற்பெரிய சன்னதியில்
அசையா விளக்கெரியும் அய்யருட சன்னதியில் 140
பத்து முகத் தீவட்டி பாங்காக நின்றிலங்க
அம்மனுட சன்னதியில் ஆயிரம் விளக்கெரியும்
விசாலாட்சி சன்னதியில் வெள்ளி விளக்கெரியும்
பதினெட்டு மேளம் பாங்காகத் தான்முழங்கும்
வெண்சாமரை வீச வேதியர்கள் பாடிவர 145
[4]கவரி பரிமாறக் [5]கயற்கண்ணாள் வீற்றிருக்க
அரம்பை ஊர்வசியும் ஆலாத்தி ஏந்தி நிற்க
விசுவநாத சுவாமியும் விசாலாட்சி அம்மனுமாய்
அலங்கார முள்ளதொரு ஆட்சி ஐயர்பட்டணமாம்
நெட்டுப் [6]பதின்காதம் நெருக்கமுள்ள
பட்டணமாம் 150
[7]அஞ்சு நல்ல காதம் அகலமுள்ள பட்டணமாம்

---

1. சித்துநிலை கைவரப்பெற்றவர்கள் 2. பொற்கோபுரம்
3. புகழ்மிக்க 4. வெண்சாமரை வீச 5. மீனாட்சி
6. நூறு மைல் தூரம் (பத்துக்காதம்) 7. ஐந்து

வேதியர்கள் வீதி வெகுகோடி தான் தெருவும்
[1]காராளர் வீதி கனகோடி தான் தெருவும்
வைசியர் பலகோடி வன்னமுள்ள குச்சிலியர்
பட்டாணி வீதி பலகோடி தான் தெருவும் 155

இட்டமுள்ள ராசாக்கள் இனியதொரு தெருவும்
சாதிலிங்க மேடைகளாம் சப்பிரமணித் தூங்கு மஞ்சம்
அடி கூடிச் சத்திரத்து அன்ன மிடுவாரும்
கங்கை நதி மூழ்கிக் கருமங்கள் தீர்ப்பாரும்
வைகை நதியும் வளர்ந்த திருமதிலும் 160

எங்கெங்கும் நந்தவனம் இருவாச்சி முல்லை களாம்
மல்லிகைப் பூச் செண்பகப்பூ வாய்த்ததொரு
மருக்கொழுந்தும்
அல்லியும் தாமரையும் அடைவுடனே வாச மதாய்
தேசமெங்கும் பூவாசம் சித்திரமுடன் தான் வீசும்
வாசனைகள் கண்டு வண்டுகள் ராகம் பாட 165

நெல்லி நிழலாட நெல்லிக் காய் தானுட
மெல்லியல் சேர் செவ்விளநீர் விரும்பிக் குலைசாய
வாழை கமுகு வன்னமுள்ள தேன் கரும்பு
பாளைவிடும் தென்னைமரம் பச்சைக் [2]கமுக மரம்
சென்றவிடமெங்குஞ் செங்கழுநீர் ஓடைகளும் 170

பார்த்த விடமெங்கும் பாங்கான செந்நெல் வயல்
திங்கள் மும்மாரி சிறப்பாகத் தான் பொழியும்
சிங்கமும் யானையும் சேர்ந்து விளையாடும்
பசுவும் புலியும் பாங்காய் விளையாடும்
பூனையும் எலியும் பொருந்தி விளையாடும் 175

ஆறிலொரு [3]கடமை அரமனைக்கு வாரமதாய்
அன்ன [4]சொர்ண தானம் ஆனதொரு பூதானம்
கோதானம் தான் முதலாய் குமாரி கன்னித் தானமுடன்
கட்டுக் கலங்காணும் கதிர் உழக்கு நெல்காணும்
ஆனை அடி மறையும் அடிராசி நெல்காணும் 180

1. வேளாளர் தெரு 2. பாக்கு மரம் 3. வரி
4. பொன்கொடை

கொடுப்பாரே அல்லாமல் கொள்வா ரொருவரில்லை
வாரமிடுவாரும் வயல் கணக்குப் பார்ப்பாரும்
[1]நேரமொரு சந்தி பண்ணி நேரான காவடியும்
கொண்டுவந்து சன்னதியில் குணமுடனே தான் செலுத்தி
ஆண்டி வந்து தான் தொழுகும் ஐயருட பட்டணமாம் 185
புண்ணியத்தால் மிகுந்த பொன்னகரப் பட்டணமாம்
எண்ணரிது பட்டணமாம் எல்லையெனும் பட்டணமாம்
அளவிடக் கூடாது அய்யருட காசிநகர்.

## காசி மன்னர் மகப்பேறின்மை

எழுவரசுப் பட்டணமாம் இனியதொரு வேதியரும்
சூரிய குலத்திற்குத் தோற்றமுள்ள ராசாவாம் 190
அரிய குல [2]வங்கிஷத்தில் அமர்ந்ததொரு ராசாவாம்
முடிபெருத்த ராசாவாம் முத்துக் கிரீடமாம்
வடிவான ரெத்ன மணி பதித்த கிரீடமாம்
மாற்றரசர் சிங்கம் மன்னன் நாராயணனும்
[3]மகுடந் தரித்ததொரு மகராசா வேந்தனுந்தான் 195
இந்தப் படியாய் இருந்துமே ஆளுகையில்
சொந்த மக னில்லாமல் சோர்ந்து மனந்தளர்ந்து
புத்திரனுமில்லாமல் போத மனஞ் சலிப்பாய்
மெத்த மனது நொந்து வேந்தனுந்தா னப்போது

## மகப்பேறு விரும்பிச் செய்யும் அறங்கள்

பட்டத்துக்கு மைந்தன் பாங்காக வேணுமென்று 200
திட்டமுடன் பாற்பசுவும் திறமாக ஆயிரந்தான்
[4]மயேசுர பூசை [5]நித்தியம் வகையா யிரம் பேர்க்கு
அன்ன [6]போசனம் அன்பாய் நடத்தி வைத்தார்

1. ஒரு வேளை உணவு கொள்ளும் விரதம் 2. வமிசம்
3. கிரீடம் 3. சிவனடியார்க்கு அமுது படைக்கும் பூசை.
4. தினந்தோறும். 5. உணவு.

விசுவநாத சுவாமிக்கு வெள்ளியினால் வாகனங்கள்
உச்சிதமாக உண்டு பண்ணி வைத்தார்கள் 205
நந்தவனஞ் சோலைகளும் நாலு திக்கு முண்டுபண்ணிச்
சாலைகளுஞ் சத்திரமும் தர்மமாய் உண்டு பண்ணி
வந்தபேர்க் கன்னம் மறவாமல் தான் கொடுத்து
ஆயிரம் தெப்பக்குளம் அடைவாக வெட்டி வைத்தார்
இந்தப் படியாக இயல்பாகப் பண்ணி வைத்தார் 210
பார்வதியும் ஈஸ்பரனும் பண்பாகத் தானறிந்து
நேராக ராசனுமே நிச்சயமாய் மைந்தன் வரம்
கேட்கிறா ரென்று [1]கிருபை யுடன் ஈஸ்பரியும்
இப்படிக்குச் சொல்லி இருக்கின்ற வேளையிலே,

## விருத்தம்

சிவகாம வல்லி நேய
திரிபுரம் எரித்த சாமி, 215
பவமான பாசம் நீக்கிப்
பாரினை ஆளும் புத்திரன்
தவமுடன் ஞானங் கல்வி
[2]சற்குண விவேக வானாய்
நவகோடி தேசம் ஆள
நல்லபுத் திரனைத் தாரும் (1)

பாற்கடற் பச்சை மாலே
பார்தனை அளந்த மாலே
ஆல்தனில் துயிலு மாலே
அச்சுதா பச்சை மாலே 220
நீலமே கவர்ண மாலே
நிரந்தர மான மூர்த்தி
சாலவே புத்திரன் தந்து
[3]தரணியை ஆள வைப்பாய் (2)

## சிவபெருமான் மகப்பேறு நல்கத் திருவுளங்கொள்ளல்

இப்படி அரசன் போற்ற
ஈஸ்பரர் அறிந்து நன்றாய்ச்

1. கருணை 2. நல்ல குணமுடைய அறிஞன் 3. பூமி

செப்பலுங் கேளா மாலே
சீர்பெறு காசி ராசன்
ஒப்புடன் நர்மை நம்பி
உறுதியா யிருந்தான் இப்பால் 225

எப்படி யாலும் மைந்தன்
இயல்புடன் அருள வேணும் (3)
மாலுடன் சிவனுஞ் சொன்ன
வார்த்தையை அறிந்து நன்றாய்ச்
சாலமுக் கோடி தேவர்
தங்களை வரவ ழைத்து
ஞாலமாய் நாற்பத் தெண்ணு
யிரம் ரிஷிக் கணங்க ளோடு
சீல மாய் எழுந்த மற்ற
தேவ ரெல் லாரும் வந்தார். (4) 230

வந்தவர் தமமை நோக்கி
வகையுடன் தானுஞ் சொல்வார்
இந்தமா நிலத்தில் காசி
ராசனுக் குமந்து நன்றாய்த்
தந்துதான் புவிபாள் நல்ல
சற்புத்திரன் அருள வேணும்
சிந்தைதான் மிகம கிழ்ந்து
1உத்திரஞ் சொல்லு மென்றார். (5)
சொல்லவே கேட்ட லோடு
சுருதியா கரணத் தானே 235

மெல்லவே நன்றாய் வீர
முனிதனை அழைத்துச் சொல்வார்
நல்லவன் காசி ராசன்
தனக்குமே புத்திரந் தான்
வல்லமை யாய்க்கொ டுத்து
மாநிலம் ஆள வேண்டும். (6)
இப்படி முனிக்குச் சொல்லி
இயல்பதாய் மந்திர பிண்டந்தான்

1. மறுமொழி

தப்பாமல் கொடுத்து வீர
தேவனை அனுப்ப நன்றாய் 240
சொற்படி தவறா மல்தான்
சுருதியாய்ப் பிண்டந் தன்னை
மைப்புடன் காசி ராசன்
மனைவிக்குக் கொடுத் தானன்றே. (7)

நடை

**காசி மன்னர் தவம்**

புத்திரன் இல்லையென்று போற்றா தவசிருக்க
கெங்கைக் கரையோரம் கிருபையுள்ள நல்வனத்தில்
மாகாளி வீற்றிருக்கும் வனத்தில் தவசிருந்தார். 245
இருந்தார் பெருந்தவசு எல்லோருங் கொண்டாட
இருந்த விடந்தனிலே இருசடையும் வேரோடிக்
கறையாறும் புற்றுவைத்துக் கள்ளிகள் தான் முளைத்துப்
பாதிரியும் முல்லையும் பல்விருட்சம் தான் முளைத்து
முல்லைக் கொடியும் முழுதீ செண்பகமும் 250
மந்தாரை பிச்சி வாசமுள்ள மல்லிகையும்
இருண்டதொரு நிழலாய் இருந்ததே அவ்வனமும்
இப்படி அருந்தவசு இதமாகச் செய்கிறதை

**தவத்திற்கு இரங்கிய உமையம்மை சிவனிடம் கூறுதல்**

விசுவநாத சாமியும் விசாலாட்சி அம்மனுமாய்த்
திங்கட்கிழமை சிவன் பிறந்த நாளையிலே 255
ஒருசந்தி தானிருந்து ஒருசாம வேளையிலே
புலியாச னத்தில் போதவே பூசை பண்ணிப்
1பாலடிசில் உண்டு பன்னீரால் வாய் பூசி
2அடைக்காயும் 3வெள்ளிலையும் அடைவாகத் தானருந்திச்
சிங்கா தனத்தில் சிவனிருக்கும் வேளைதனில் 260
இடப்பாக மாகவந்து ஈஸ்பரியும் ஏது சொல்வாள்
காரண போற்றி 4கறைக்கண்டர் தாள்போற்றி

1. பாற்சோறு 2. பாக்கு 3. வெற்றிலை 4. சிவபெருமான்

எந்தன் மணவாளா ஈஸ்பரனே என்றுரைத்தாள்
சொல்லுகிறேன் கேளும் சுவாமி நீர் 1(தயவா) யென்ருள்
காசி நகராளும் கனமான ராசனுக்கு 265

மாந்தர் சிங்கம் மன்னன்நா ராயணனும்
எதிர்க்க ஒருவரில்லை என்று சொல்லிக் கீர்த்திபெற
நாடாளும் மன்னன் நர்மைத் துதி செய்திடுவான்
புத்திரனில்லை யென்று பெருந்தவசு பண்ணுகிருன்
அவனுக்கொரு குழந்தை அருளுஞ் சிவனுரே 270

என்று சொல்லி ஈஸ்பரியும் ஈஸ்பரனைத்
தெண்டனிட்டாள்

## சிவபெருமான் வீரபத்திரரை மகவாக அனுப்பல்

அப்போது சிவனுரும் அதிப்பிரியம் உண்டாகி
நல்லதென்று சொல்லி நளினமுடன் அச்சணத்தில்
தக்கனுட 2வேள்விதனைத் தானழிக்க வேணுமென்று
வேர்வையில் தான்பிறந்த வீரபத்திரனை நினைத்தார் 275

நினைத்தது தெரிந்து நேசமுடன் விரபத்திரன்
வலமாகவே சிவனை வணங்கி அடிதொழுது
தெண்டனிட்டு நின்று தீர்க்கமுடன் வாய் புதைத்து
என்னை நினைந்ததென்ன ஈஸ்பரரே போற்றி என்ருன்
அப்போது சிவனுரும் அதிகசந் தோஷமுடன் 280

நாம் நினைத்த காரியம்தான் நன்ருகச் சொல்லுவேன்
கேள்

ராச குலத்தில் நலமாக நீ பிறந்து
நீச குலத்தில் நேசமுடன் தான் வளர்ந்து
பதினுறு வயது பாங்குடனே சென்ற பின்பு
மாயன் பெருமாள் ஒரு வஞ்சகத்தைத்தான் நினைந்து 285

(கால)த்தில் தெய்வ கன்னிகையைப் பெற்றளிப்பார்
நின்றுமய லாகும்படி கன்னியவள் பிறப்பாள்
வஞ்சியரைச் சிறையெடுத்து மதுரைநகர்
போய்ச்சேர்ந்து

1. 'த்தத யன்ருள்' என உள்ளது 2. யாகம்

தென்மதுரை ராசனையும் திறமாகக் கண்டுகொள்வாய்
மதுரை நகர்தனிலே வாழுகின்ற நாளையிலே 290
தெய்வகன்னி தானொருத்தி தென்மதுரையில் பிறப்பாள்
1அட்டாளைச் சொக்கருக்கும் அங்கயற்கண் அம்மனுக்கும்
2திருவனந்த வேளையிலே செய்வாள் பணி விடைகள்
பஞ்சவர்ணக் கிளியது போல் 3பலுக்குவாள் வார்த்தைகளை
எண்ண மற்றுத் தானும் இருப்பாள் திருக்கோயில் 295
அவளைச் சிறையெடுப்பாய் அவகேடு தானும் வரும்
தப்பாமல் அப்போது தாள்பணிவாள் அவளும் உனக்கு
அப்போ துனக்கு அறிவுமிக வுண்டாகும்.
மதுரை நகரந்தனிலே வாழுகின்ற சொக்கரையும்
மீனாட்சி யம்மனையும் விருப்பமுடன் நீ பணிவாய் 300
அப்போது மீனாட்சி அதிக வரந் தந்திடுவாள்
மெத்த வரங்கொடுத்து மேலான பூதலத்தில்
முப்பூசை கொண்டு மூர்க்கமுடனே யிருப்பாய்
வாக்கு வரங்கொடுப்பாள் வல்லவளும் மீனாட்சி
இந்தப் படிக்கு இயல்பாக இப்புவியில் 305
நேராக லோகத்தில் நேசமுடன் தான் பிறக்க
போவென்று ஈஸ்பரனும் புகழ்ந்து விடைகொடுத்தார்.

## வீரபத்திரர் சிவனிடம் வேண்டிக் கொள்ளல்

அப்போ தரனுரை அடிவணங்கித் தெண்டனிட்டு
அஞ்சிப் பயந்து அடிபணிந்து வாய் புதைத்துத்
தானெழு லோகத்தில் நான் பிறந்தேனு மாகில் 310
பூதலத்தில் தானும் புகழ் பெரிய தேவதைகள்
அய்யன் பிடாரி அடங்காத துர்க்கைகளும்
பூத நாத கணங்கள் பெரியதொரு வீரமுனி
பில்லியுடன் சூனியங்கள் பேர்பெரிய 4டாகினியும்
வெய்ய புலி கரடி வீறான யாளி சிங்கம் 315
அயந்தலை நரகம் அதிக விஷ தாரிகளும்
எல்லைக்கரை கொள்ளாதே இதற்கு நான் என்ன செய்வேன்
இத்தனை பேய்களுக்கும் இயல்பாக வாயடக்க
சாமி எனக்கு வரம் தந்தருளப்ப வேணு மென்றார்

---

1. மேல்மாடம் 2. திருப்பள்ளி எழுச்சி
3. சொல்லுவாள் 4. பிணம் தின்னும் பேய்.

## வீரபத்திரர் வரம் பெறல்

அப்போது சிவனுரும் அதிப் பிரிய முண்டாகி 320
உத்திச்சுப் பார்த்து உபதேசம் சொன்னூராம்
ஒத்த வரம் வாங்கி விராதி விரையனும்
உம்மை நான் நினைத்த இடத்தில் உற்ற துணையாக வந்து
என்ன வரம் கேட்டாலும் எனக்கு நீர் தந்தருளும்
வேறில்லை யென்று விருப்பமுடன் தெண்டனிட்டான். 325
தப்பாமல் இவ்வரங்கள் தாரும் என்றூர் ஈஸ்பரியும்
இந்த வரம் வாங்கி ஈஸ்பரியைத் தெண்டனிட்டான்
தாயே தயாபரியே சங்கரியே என் தாயே
ஆதி பராபரியே அகிலாண்ட நாயகியே
நானினைக்கும் வேளையிலே நன்றாக நீயும் வந்து 330
உற்ற துணையாயிருந்து உதவிசெய்ய வேணுமம்மா
என்ன வரம் கேட்டாலும் எந்தனுக்குத் தந்தருள்வாய்
வேறு மொன்றும் இல்லையென்று விருப்பமுடன்
தெண்டனிட்டான்
அந்த மொழி கேட்டு ஆதி பராபரியும்
சிந்தை மிக மகிழ்ந்து சிவனை மனதில் எண்ணி 335
இந்த உலகில் நீயும் புதுமையுள்ள தேவதையாய்
மும்மூர்த்திகள் தனக்கு முன்னோடும் சேவகனாய்
முப்பூசை கொண்டு மூவுலகிலுள்ள வர்க்கும்
மெய் வருந்திப் பூசைகொண்டு வேண்டும்
வரங்கொடுக்கத்
தப்பாமல் இவ்வரங்கள் தந்தோமென்றூள் ஈஸ்பரியும் 340
அப்போது சிவனுரும் ஆதி பராபரியும்
ஆதி நாராயணன் அருந்தவசில் வந்திறங்கிப்
புத்திர சந்தானமும் போதவே தான் கொடுத்துத்
தவசை நினைத்து சங்கரனூர் ஏகினூர்
அப்போது ராசனுந்தான் அருந்தவசை விட்டிறங்கிக் 345
கெங்கை நதியில் இருமையுடன் ஸ்நானம் பண்ணி
தானங்கள் பண்ணித் தானிருக்கும் வேளையிலே
அங்கயற் கண் மாது [1]அரமணையில் பள்ளி கொண்டாள்

1. அரண்மனை

[1]அதே சங் கண்டே ஆயித்தெழுந் திருந்தாள்
பார்வதியாள் தன்னருளால் பாலன்தரிக்கக் கண்டாள் 350
அதே சங்கண்டதல்லால் அருள் பெற்றேனில்லை யென்றாள்
மெத்த துயரமுடன் வீற்றிருக்கும் நாளையிலே
நாராயண வேந்தன் நலமாகவே வரவே
கண்டாளே அங்கயற்கண் காரிகையாள் அப்போது
[2]சாஷ்டாங்க மாகத்தான் விழுந்தாள் அப்போது 355
அப்போது ராசனுந்தான் அதிக பிரியமுடன்
வாழ்த்தி யெடுத்து மன்னவனும் ஏது சொல்வான்
பரமேசு பரனும் பாங்கான ஈஸ்பரியும்
புத்திர [3]சந்தானம் போதவே ஈந்ததுவும்
தவசு முடித்துத் தான் வந்து சேர்ந்ததுவும் 360
சொன்னாரே வேந்தனுந்தான் சொற்பெரிய மங்கையர்க்கு

## அரசிக்கு மகப்பிறத்தல்

சந்தோஷ மாகத் தானுந்தன் தேவியரும்
[4]போசனங்கள் உண்டு பொருந்தவே [5]வாய்பூசி
(கூடி ஒன்று)யிருந்து குலாவினார் அப்போது
சாத்திர வேதியர்கள் சாத்திரத்தில் சொன்னபடி 365
பார்த்து இருக்கப் பரமசிவன் தன்னருளால்
வந்தவள் அங்கயற்கண் வயிற்றில் தரிக்கக்கண்டாள்
ஓராந் தான் திங்களிலே [6]உற்பனமும் உண்டாகி
வாரணத் திருமேனி வயிறுங் [7]குவிந்திடவே
பார்த்தவர்க்குக் கெர்ப்பிணியாய்ப் பால்வடியுங் கொங்கைகளாய்த் 370
திரண்டு உருண்டு தீர்க்கமாய்க் கெர்ப்பமது
அஞ்சாந்தான் திங்களிலே அழகுமிக உண்டாகி
ஏழாந்தான் திங்களிலே இன்பமிக உண்டாகி

---

1. அதிசயம்
2. எட்டுறுப்புக்கள் தரையில் படுமாறு வணங்கல்
3. மகப்பேறு 4. உணவு 5. கை வாய் கழுவுதல்
6. தோற்றம் 7. கருவுற்ற நிலையில் வயிற்றுத் தோற்றத்தில் காணும் மாறுபாடு

பத்தாந்தான் திங்களிலே பாலகனைப் பெற்றெடுத்தாள்
ஆளில் அழகனுமாய் அழுத்தமுள்ள சேவகனாய் 375
ஆயிரங் கோடி அழகுள்ள சூரியன்போல்
விராதி விரன் வீரையனுந் தான்பிறந்தான்

## மன்னன் சோதிடரை வரவழைத்தல்

பிறந்த வுடனே [1]பூரித்தான் ராசனுந்தான்
மந்திரியை அப்போது வகையுடனே தானழைத்தான்
மந்திரியும் ஓடிவந்து வாகுடனே கைகுவித்தான் 380
ராசன்முன்னே கைகுவித்தான் நலமான மந்திரியும்
கூடவே கைதொழுதான் குணமுள்ள ராசாவும்
அப்போது ராசாவும் மந்திரி களைப்பார்த்து
இப்போது சோசியரை இனியழைத்து வாருமென்றார்
[2]அந்தச் செணமே ஆனதொரு சோசியரும் 385
[3]விரசுடனே ஆளனுப்பி வேதியரைத் தானழைத்து
அப்போது ராசர்முன்னே அடைவாகக் கூட்டிவந்து
கூட்டிவந்து விட்டார்கள் குணமுள்ள ராசர்முன்னே
வேதியரு மோடிவந்து வேந்தனருகில் சென்று
[4]ஆசீர்வாத மென்று [5]அட்சதையும் தான்கொடுத்தார் 390
கூடவே [6]தெண்டனிட்டார் குணமுள்ள ராசாவும்
இருமையா என்றுசொல்லி இட்டாரே ஆசனமும்
அப்போது வேதியரும் ஆசனத்தில் தானிருந்து
அழைத்துவரச் சொன்னதென்ன அறியலம் ராசாவே
என்றுசொல்லி வேதியர்கள் இதமாகத் தான்கேட்க 395
அப்போது ராசனுந்தான் அடைவாகச் சொல்லலுற்றார்
மைந்தன் பிறந்தானென்று வகையுடனே சொல்லலுற்றார்
உலகமெல்லாம் ஆளுதற்கு ஒருவன் பிறந்தான்காண்
வெள்ளிக் கிழமை விடிந்துபத்து நாழிகையில்
[7]செனன மெடுத்தான்காண் தீர்க்கமுள்ள சோசியரே 400

1. மகிழ்ச்சிமிக எய்தினன் 2. அந்தக்கணம் 3. வேகம்
4. மங்கலம் கூறும் வாழ்த்துரை
5. வாழ்த்தி வழங்கும் மந்திர அரிசி 6. வணங்கினர்
7. பிறவி.

நாழிகை நட்சத்திரம் நலமாகச் சொல்லுமையா
பஞ்சாங்கம் பார்த்துப் பதறாமல் சொல்லுமையா

## சோதிடர் எதிர்காலப் பலனுரைத்தல்

காசி நகராளும் கர்த்தரே நீர்கேளும்
மைந்தன் பிறந்து வருவினைகள் சொல்லுகிறோம்
பிள்ளை பிறந்த [1]பிரபவங்கள் சொல்கிறேன் கேள் 405

மைந்தனும் இப்போது மாலையிட்டுத் தான்பிறந்தான்
குழந்தையும் இப்போது கொடிசுற்றித் தான்பிறந்தான்
என்றுசொல்லிச் சோசியரும் இதமாகவே உரைக்க
அப்போது ராசாவும் ஆச்சரிய மென்றுசொல்லிப்
பார்ப்போ மெனவே பண்பாய் மனதிலெண்ணி 410

ஆரடி பெண்ணே ஆயிரம்பேர் தாதியரில்
மேலான தாதியரில் விருப்பமுடன் இப்போது
பாலகனைத் தானெடுத்துப் பதறாமல் காட்டுமென்றார்
அப்போது தாதியரும் அன்புடனே தானெடுத்துத்
தங்கத் தாம்பாளத்தில் தயவுடனே தானெடுத்துப் 415

பட்டையதில் விரித்துப் பாலகனைத் தூக்கிவைத்துத்
தட்டோடே பாலகனைத் தானெடுத்துக் காட்டலுற்றார்
(பார்)த்தார் குழந்தைதனைப் பதறாமல் ராசாவும்
ஐயாவே சோசியரே ஆனதொரு சோசியரே
மைந்தன் கழுத்தில் மாலை இருக்குதையா 420

குழந்தை கழுத்தில் கொடியு மிருக்குதையா
மாலை விழுந்தாக்கால் வருவினையைச் சொல்லுமென்றார்
கொடிதான் விழுந்தாக்கால் கொடுமைதனைச்
சொல்லுமென்றார்
அப்போது சோசியர்கள் அன்பாகத் தான்பார்த்து
மாலை விழுந்தாக்கால் மாமனுக்கு ஆகாது 425

கொடிசுற்றித் தான்பிறந்தால் கோத்திரத்துக் காகாது
ஆரக்கழுத்து நம்முடைய அரண்மனைக்கு மாகாது
[2]அரைச்சணம் வைத்திருந்தால் அரண்மனைகள்
வெந்துவிடும்

1. — பலன்கள் 2. அரை விநாடி நேரம்.

வைத்திருந்தால் பொல்லாது வந்துவிடும் 1பொல்லாங்கு
தப்பாமல் வந்துவிடும் தான்வினைகள் மன்னவனே. 430

கோட்டை இடிந்துவிடும் கொம்மை பொடியாகும்
இனைப்பொழுது வைத்திருந்தால் தீங்குவந்து
மூண்டுவிடும்
அரைநாழி வைத்திருந்தால் அமர்வந்து நேர்ந்துவிடும்
இந்தப்படியே நடக்குமென்றார் சோசியர்கள்.

## மன்னன் மனத்துயர்

சோசியர்கள் சொற்கேட்டுத் தோற்றமுள்ள ராசாவும் 435
கேட்டு மயங்கிக் 2கிலேசமுடன் தான்விழுந்தார்
மெத்த மயங்கி விழுந்தாரே சோகமுடன்
3காரியப்பேர் மந்திரிமார் கலங்கினார் அப்போது
அப்போது மந்திரிமார் ஆனதொரு ராசனுக்குச்
சுக்குப்பொடி காதில்வைத்துத் துரிசாக ஊதினார்கள் 440

சோகந் தெளிந்து சுருக்கா எழுந்திருந்து
பண்ணிய தோர்தர்மம் பலித்ததோ எந்தனுக்கு
ஆயிரந் தருமஞ்செய்தும் அரும்பாவி ஆனேனே
இந்த விசயந்தான் ஈஸ்பரனார் தன்செயலோ
நம்மால் செய்வதென்ன நாராயண சோசியரே 445

4(இந்த மகன்) தன்னை என்னதான் செய்வமையா
(கூடவே வைத்திருந்தால்) குறைகள்வந்து
சூழ்ந்துவிடும்
இந்தநல்ல பாவத்துக்கு என்னசெய்வோம் சோசியரே

## சோதிடர் பரிகாரம் கூறல்

என்ன நல்லசோசியரும் இதமாகத் தான்கேட்டு
அறிந்தமட்டும் சொல்லுகிறோம் ஆதிமக ராசாவே 450
ஆயிரம் கோடிபொன் அடைவாகத் தானெடுத்துத்

---

1. தீங்கு 2. மனத்துயர்
3. அரச காரியத்தில் துணை செய்வார்
4. இத - நதை என இப்பகுதி ஏட்டில் சிதைந்து காணப் படுகிறது.

தங்கத்தினாலே தாம்பாளம் உண்டு பண்ணித்
தாம்பாளந் தன்னில் [1]தனஞ்சியனைத் தானும்வைத்துத்
தந்தப் பல்லாக்கில் தயவுடனே தானும்வைத்து
அண்ணாக் கயறுகட்டும் ஆண்பெண் சகலருமே 455
பட்டணத்துப் பிள்ளை பயணமே போகுதென்று
அறிந்து மிருக்கட்டும் ஆதிமக ராசாவே
[2]ஆரணிய மானதொரு அருங் கானகந்தனிலே
கொண்டுபோய் வைத்தால் குறைதீரும் ராசாவே
என்றுசொல்லிச் சோசியரும் இதமாகத்
தானுரைத்தார் 460

## அரசி அறிந்து வருந்தல்

காசிநகர் வேந்தன் காதலிதான் கேட்டு
ஐயோ சிவனேஎன்று அடித்து விழுந்தழுதாள்
அஞ்சு சிரசுடைய ஆதிமகா பிரம்மாவே
என்வயிற்றில் பாலகன் இதமாகக் [3]கற்பிவித்துப்
பத்துமாதம் சுமந்து பாலகனைத் தானளிக்க 465
எழுதினியோ பிரம்மாவே என்தலையில் நீர்தானும்
என்றுமிகச் சொல்லி ஏந்திழையாள் தான்புலம்ப
வேலா அறுமுகவா வித்தகனார் ஈன்றமைந்தா
மேனி பதறுதையோ பிரமா பழிகாரா
ஓலமிட்டுத் தானழுதாள் உத்ததுணை காணேனே 470
தாயே விசாலாட்சி தையலே காமாட்சி
மாயமா என்தலையில் மாறி எழுதினியோ
[4]ஆயனார் உந்திதனில் அமர்ந்ததிருப் பிரமாவே
[5]வாய்திறந்துகாட்டி (லந்த) நடை(யு)ந் தள்ளுவானே
சோலை மலையழகர் சொற்பெரிய மாலழகர் 475
[6]சாலவடி வழகர் சங்குசக்கர மாலழகர்
சீலமுடன் என்தலையில் தெரிந்து எழுதினியோ
மாலைப் பொழுதில் மைந்தன் வாடி அழுவானே
பாவிநான் என்தலையில் பதறி அழுவானே
பாவிநான் பெற்றமைந்தன் பார்வனத்தி லேயழுதால் 480

1. அர்ச்சுனன் போல் சிறந்தவன் 2. அடர்ந்த காடு
3. தோன்றச்செய்து. 4. திருமாலின் கொப்பூழ்
5. இவ்வரியின் பொருள் தெளிவுபடவில்லை 6. மிகவும்

கூவி நரிகள்வந்து கூடிக் கடித்திடுமே
ஆவிகளின்று என்மகனுக்கு அங்கம் அழிந்திடுமே
தீவினை களாகச் [1]சிருட்டித்தீர் பிரம்மாவே
தவசிருந்து பெற்றமைந்தன் தனிக்காட்டி லேயிருக்க
சிவனே பிரமாவே தேடிப்பிடித் தடைத்திர் 485

அவமா யென்மைந்தன் அழுது பரதவிக்க
மகனே வயிறேடுன்னை நான்வாரிக் கொடுப்பேனோ
குகனே முருகோனே குழந்தை வடிவேலோனே
நகம்வேறு கைவேறாய் நரிபிடுங்கித் தின்னிடுமே
செகனூர் பிரமாவே தேடி எழுதினீயோ 490

என்னசெய் வேன் கண்மணியே என்றே அழுதழுது
கண்ணும்புகைந் தெந்தனுக்குக் கருத்தும் அழியுதையோ
இன்னுமரை நாழிகையில் எடுத்துப்போய்க் கானகத்தில்
பொன்னே என்கண்மணியே போட்டு விடுவாரே
செந்தேனே கண்மணியே [2]தெகட்டாத தெள்ளமுதே 495

இந்நகரம் நீயிருந்தால் இனியழியும் என்றாரே
சிந்தனையாய் என்வயிற்றில் சிருஷ்டித்தாய் பிரம்மாவே
வந்து உயிரெடுத்து வனத்திலே போடுவரோ
காட்டிலே என்குழந்தை கதறி அழுவதற்கு
நாட்டிலே என்னபழி நான்செய்தேன் பிரம்மாவே 500

[3]தாட்டிக மாகத் தரணிதனை ஆள்வதற்கு
ஏட்டில் எழுதினீயோ எனைப்படைத்த பிரம்மாவே
விழுந்து புரண்டழுதாள் மேனியெல்லாம் புண்ணாக
[4]குழுந்தவனச் சோலையிலே குடியிருக்கப் போனாயோ
எழுந்து வனந்தனக்கு ஏகுதியோ என் மகனே 505

## மன்னன் குழந்தையைக் கானகத்தில் விடச்செய்தல்

கொண்டுபோய்ப் போட்டுவிடச் சொல்லுவோம்
குழந்தைதனை
ஆமென்று சொன்னாரே ஆனதொரு சோசியரும்
நல்லதென்று வேந்தனுந்தான் நலமாகக் கண்கலங்கிச்
செங்கமலத் தாதியரைச் சீக்கிரமாய்த் தானழைத்துப்

1. படைத்தீர். 2. திகட்டாத 3.
4. குளிர்ச்சி பொருந்திய

பாலகனைத் தானெடுத்துப் பயணம்வரச் சொன்னாரே 510

தட்டோடே பாலகனைத் தாதியவள் ஏந்திவந்து
எடுத்துவந்து பாலகனை இருகை ஏந்திநின்றாள்
தட்டோடு பாலகனைத் தயவாகத் தானெடுத்துப்
பல்லாக்கு மேலே பாலகனைத் தானும்வைத்து
ஆடலுடன் பாடல்களும் அதிசெயமாய் [1]கற்றகளும் 515

கூட்டத்துடனே கொண்டுபோய்க் கானகத்தில்
வைத்துவரச் சொன்னாராம் [2]மணிமகுட ராசாவும்
அப்போது தானும் அவள்தாதி தானெடுத்து
ஆடலும் பாடலுடன் அதிர்வெடிச் சத்தமுடன்
ஆனை புலிகரடி ஆளுகின்ற அவ்வனத்தில் 520

செந்நாய் சிறுபுலியும் சேர்ந்திருக்கும் அவ்வனத்தில்
[3]மானும் மரையும் வாழுகின்ற அவ்வனத்தில்
[4]ஆளி நரிகள் சிங்கம் ஆளுகின்ற அவ்வனத்தில்
வானந் தெரியாமல் வளர்ந்திருக்கும் அவ்வனத்தில்
கொண்டுபோய்க் கானகத்தில் குழந்தையை
வைத்துவந்தார் 525

அந்தமட்டோடே அமர்ந்தார்கள் பட்டணத்தில்

## குழந்தையை நரி, பேய், முனிக்கணங்கள் கண்டு வியந்து போற்றல்

பாலகனு மப்போது பார்வனங்கள் தனிலே
மாமரத்தின் கீழே [5]மஞ்சன் குழந்தையது
ஆங்கார சத்தமிட்டு அழுதான்காண் அவ்வனத்தில்
அழுத குரல்கேட்டு ஆனதொரு பூவனத்தில் 530

மஞ்சன் அழுதசத்தம் வால்நரிகள் கேட்டனவே
குழந்தைக் குரல்கேட்டுக் கூட்டமிட்டு நரிஇனங்கள்
கிட்டவந்து நரியினங்கள் [6]கெக்கைகொட்டிக் கூப்பிடவே
இன்றைக்கு வாய்க்கிரைகள் இதமாக வாய்த்ததென்று
மண்ணைப் பறித்தெறிந்து மனமகிழ்ந்து கூடிவந்து 535

---

1. — ? 2. இரத்தினகிரீடம்
3. மான்போலும் விலங்கினம் 4. சிங்கமுக விலங்கு.
5. மனிதன் 6. எக்காளமாய் ஊளையிடல்.

நாடி நடந்துவந்து நன்முகக் கிட்டவந்து
பாலகன் முகம்பார்த்துப் பக்கத்தே வந்துநின்று
சந்திர சூரியனே சாதி பகவானே
இந்திரனே நான்முகனே ஏறுமயில் வாகனனே

## கொச்சகம்

நாட்டில் நரிஇனங்கள் நன்முகவே கூடிக் 540
காட்டிலே நிற்குமந்தக் கரும்பேய்கள் தான்கூடத்
[1]தாட்டிகமான சடாமுனி சங்கிலிக் கருப்ப
கூட்டமிட்டுக் கூக்குரலாய்க் கோடிநரி சூழவே.

## நடை

மொண்டிப்பேய் தான்கோடி [2]முக்கும்பேய் தான்கோடி
சண்டிப்பேய் தான்கோடி சடாமுனிகள் தான்கோடி 545
கண்டு வருகுதுகாண் கானகத்தில் வீரையனை
வந்த முனிகளெல்லாம் குழந்தை வடிவைக்கண்டவுடன்
போற்றிசெய்து நின்றார்கள் பூதலத்துப் பேய்களெல்லாம்
அப்படிச் சூழ்ந்து அடைவா யிருக்கையிலே.

## பார்வதி பரமசிவன் குழந்தையிருக்குமிடம் வருதல்

வையகங்கள் தோறும் வாழும் பிராணிகட்கு 550
ஐயன் சிவனார் அளந்துபடி போட்டாராம்
அப்பாலு மையாளும் ஐயன்கூட வந்தாராம்
பாலனழுத குரல் பார்வதியுந் தான்கேட்டுச்
சீராள் உமையாள் திருச்செவியில் கேட்டதுவே
பிள்ளை அழுததொரு பெரியசத்தம் தான்கேட்டு 555
ஆருமில்லாத அருங் கான கத்திலிலே
பாம்பிருக்கும் வனத்தில் பாலன் குரலேது
கண்டருள வேணுமென்று கட்டளையுஞ்
செய்யுமென்றான்
நல்லதென்று சொல்லியப்போ நாடியே அங்கேவந்தார்
வந்து மகனை வாரிஎடுத் தணைத்துச் 560

1. —? 2. —?

சிந்தை மகிழ்ந்து தேவியரும் அப்போது
மார்க்கண்டன் சென்மமதாய் வந்துதித்த பாலனிவன்
கானகத்தில் கிடந்து கதறியழக் காரியமென்
[1]புனத்தில் கிடந்து புலம்பிஅழக் காரியமென்
எனக்குத் தெரிய இயம்புமென்றாள் ஈஸ்பரியும் 565

## பார்வதி வினவப் பரமசிவன் குழந்தை வரலாறு கூறல்

சொல்லவே கேளும் தோற்றமுள்ள பெண்ணரசே
நாராயண வேந்தன் நலத்தவசில் மைந்தன்தான்
பொல்லாத தினத்தில் புதல்வன் பிறந்தானென்று
சொல்லாமலே இவனைக் கொண்டுவந்து இவ்வனத்தில்
வைத்தார்கள் என்று வகையுடனே தானுரைத்தார் 570

இன்னும் புதுமையுண்டு இவன்வளரும் நாளையிலே
கன்னி உமையாளே காரணங்கள் மெத்தவுண்டு
பெண்களை மயக்கவல்ல புண்ணியருந் தானும்வந்தான்
மெல்லியர்கள் தான்மயங்கும் மெத்த அழகுள்ளவன்காண்
மங்கையர்கள் தான்மயங்க மன்னன் இவன்தானும் 575

கற்றவித்தை அத்தனையும் கண்டறிந்த [2]திராணி இவன்
உல்லாச மங்கையரை உறவுசெய்யும் கள்ளனிவன்
அறையிலிருக்கும் பெண்ணை ஆட்டிவைக்க வல்லவன்காண்
ராசகன்னி யானாலும் நல்லசிறை வென்றிடுவான்
பேசிய பேச்சிலேதான் பெண்களை மயக்கிடுவான் 580

சூதுகளுண்டு மெத்தத் [3]துண்டரிக முள்ளவன்காண்
கன்னியரைப் பிடித்தாட்ட வந்தானே கண்ணுளன்
என்றுதான் சொன்னாரே இன்பமுடன் பார்வதிக்கு

## இறைவரம் பெற்ற குழந்தை நாகம் காக்க வளர்தல்

நல்லதென்று தான்கேட்டு நலமான பாலகற்கு
அந்த வனந்தனிலே அடைவாக வாழுகின்ற 585

ஐந்தலை நாகத்தை அன்பாக வரவழைத்துப்
படத்தை விரித்துப் பாலகற்குத் தானிழலாய்

1. வனம்—காடு 2. திறமைமிக்கோன் 3.

வரமது தானும் அன்பாக வேயளிக்க
இப்படித் தானிருக்க ஈஸ்பரியும் வரங்கொடுத்துப்
போகவேனு மென்று புகன்றுளே ஈஸ்பரியும் 590
நல்லதென்று சொல்லி நளினமிட ஈஸ்பரனும்
வரந்தான் மிகக்கொடுத்து வாகனத்தின் மேலேறிப்
போனார் சிவனும் பூலோக நாயகியும்
அரவங்கள் தான்வளர்க்கும் அரனுடைய சொற்படியே
நாகங் குடைபிடிக்க நல்லினங்கள் தாலாட்ட 595
[1]வாகான பேய்களெல்லாம் வந்துபணிந்து நிற்க
ஆனைபுலி கரடி அன்பாகவே பணியக்
காமதேனு வந்து கண்டமுது தான்கொடுக்க
இப்படியே நாகம் இதவாக வளர்க்கையிலே

## பட்டை வெட்டச் சக்கிலியப்பெண் அங்கு வரல்

மாதியச் சின்னன் வகையான சக்கிலியன் 600
பாளையப் பட்டார் பரிவான தொட்டியர்கள்
பொம்மண நாய்கருக்குப் பிரியமுடனே இவனும்
[2]பாதரட்சை கட்டுகிற [3]பரிவான மாதியன்தான்
மாதியன் கொண்டதொரு மைவிழியாள் சக்கிலிச்சி
வாருகளுஞ் சிவக்க வகையாக [4]ஊறக்கட்ட 605
ஆவாரம் பட்டைவெட்ட அங்குவந்தாள் சக்கிலிச்சி
பாலக னிருக்குமந்த பாரவனம் தானேக்கிக்
காதிலே ஓலையிட்டுக் கழுத்தில் சரமணிந்து
[5]வர்ணத் துக்கு வாகாகத் தானுடுத்தி
அதிர்ந்து நடைநடந்து அந்தவனத்தில் வந்தாள் 610
அறுவாளைக் கைப்பிடித்து ஆவாரம் பட்டைவெட்டிப்
பட்டை எடுத்துக்கட்டிப் பயணம் புறப்படையில்
மாமரத்தின் கீழிருந்து மைந்தன் அழுகலுற்றான்

## சக்கிலிச்சி குழந்தையை எடுத்துச் செல்லல்

குழந்தைக் குரல்கேட்டுக் கொம்பனையாள் அப்போது
கானகத்தில் குழந்தை கதறவந்த ஞாயமென்ன 615

1. ஒழுங்கான 2. செருப்பு 3. அன்புள்ள
4. தோலைப்பதனிட ஊறவைத்தல் 5. நிறம்

பார்ப்போ மென்று சொல்லிப் பைங்கிளியாள் தானடந்தாள்
ஏங்கி அழுதல்கண்டு ஏற்றமுள்ள சக்கிலிச்சி
கண்டு மகிழ்ந்து கன்னிகையு மப்போது
பிள்ளைக்கலி தீர்க்கவந்த பெருமானே என்றுசொல்லி
மைந்தன்கலி தீர்க்கவந்த மணிவிளக்கே என்று சொல்லி 620
என்றுதான் சக்கிலிச்சி இதமான பாலகனை
வாரி எடுத்து மார்போடே தானணைத்துப்
பைங்கிளியாள் தன்மேனி பச்சை யுடம்பாகிப்
பால்தனங்கள் இரண்டும் பால்சுரந்த தப்போது
கையினில் பாலகனைக் கனமாகத் தாவெடுத்துக் 625
குழந்தை தனக்குக் குணமாகப் பால்கொடுத்தாள்
பாலகன் முலைகுடித்துப் பசியாறி ஏப்பமிட்டான்
தோகை மயிலாளுக்குத் துய்யமனங் குளிர்ந்து
பாலகனை மார்பில்கட்டிப் பட்டைதலையில் வைத்து
வேர்க்க விறுவிறுக்க வீட்டுக்கு வாராளாம் 630
சக்கிலியன் கண்டு தடியெடுத்துக் கோபங்கொண்டு
இந்நேரம் கானகத்தில் என்னசெய்தாய் பெண்ணரசே
என்றுசொல்லிச் சக்கிலியன் (இயல்தடியை) ஓங்கலுற்றான்
பைங்கிளியாள் பார்த்துப் பதறாதே மன்னவனே
கோபத்தை உள்ளடக்கும் குணமுள்ள பர்த்தாவே 635
மைந்தனுமில்லாமல் மனக்கவலை பட்டோமே
பிள்ளையு மில்லாமல் பெருந்தவ சிருந்தோமே
ஆண்புத்திரன் இல்லாமல் அருந்தவசு இருந்தோமே
மைந்தன் கவலை மனக்கவலை தீர்ந்ததிப்போ
இந்தாரும் பிள்ளையென்று ஏந்திழையாள் தான் கொடுத்தாள் 640
தட்டோடே பாலகனைச் சக்கிலியன் கைக்கொடுத்தாள்

## சக்கிலியன் குழந்தையை ஏற்று மகிழ்தல்

ஏந்தி யிருக்கையிலே எடுத்தணைத்தான் மாதியனும்
இன்பங் குளிர்ந்து இருதோளும் பூரித்து
அன்பான பாலனவன் ஆச்சிரிய மாகவேதான்

சுத்தமுடன் தானதர்மம் 1சோடிகளுக் களித்து 645
வையகத்திலுள்ள மனிதர் பல பேர்க்கு
எண்ணெயும் நெய்யும் இதமாகவே கொடுத்துச்
சந்தோஷமாகச் சக்கிலியன் தானிருந்தான்
மாதியச் சின்னானுக்கு மைந்தன் பிறந்தானென்று
நாட்டில் குடியிருக்கும் நலமான சக்கிலியர் 650
கண்டறிய வேணுமென்று கடிதாக ஓடிவந்து
மாதியச் சின்னானை வகையாகத் தானுங்கண்டு
பிள்ளையும் இல்லாமல் பெருந்தவசு செய்தாயே
மைந்தனுமில்லாமல் மறுதலித் திருந்தாய்
மனச்சலிப்புத் தீர்ந்ததின்று மகாதேவன் தன்னருளால் 655
பிள்ளைக ளில்லாப் பெருந்தவலை தீர்ந்ததிப்போ
எல்லோருஞ் சொல்லி இதமாகவே உரைத்தார்
அப்போது தானும் அன்புடனே மாதியனும்
வந்ததொரு பேர்களுக்கு வரிசைமிகக் கொடுத்துப்
போமென் றனுப்பிவைத்தான் புகழ்பெரிய சின்னானும் 660
திருவள் ளுவனாரைத் திறமாகத் தானழைத்துத்
திருவாதிரை சாத்திரத்தைத் தீர்க்கமுடன்
சொல்லுமென் றான்
அப்போது சொல்லுவார் ஆனதொரு வள்ளுவனார்
சாத்திரம் சொல்லுகிறேன் தயவாக நீர்கேளும்
நல்மாட்டுச் சாணிகொண்டு நாலுமூலையாய் மெழுகிப் 665
பிள்ளையார் தானும்வைத்துப் பேரறுகு தான்சூடிப்
பாக்குடனே வெற்றிலையும் பாங்காக முன்னேவைத்துக்
காணிக்கைதானும் கனமாக முன்னே வைத்துச்
சாம்பிராணித் தூபம் சதிராக முன்னேவைத்துப்
போமென் றனுப்பிவைத்தான் புகழ்பெரிய
சின்னானும் 670
அந்தநாள் போயே அடுத்தநா ளப்பொழுதில்
விசுவகர்ம ஆசாரியை விதமாகத் தானழைத்து
அப்போது ஆசாரி அன்புடனே நல்லதென்று
தங்கப் பசும்பொன்னால் தகடுமே தானெடுத்து

1. இப்பகுதி ஓலையில் 'சேதியளுக் களித்து' என்றுள்ளது.

மாணிக்கம் பச்சை வயிடூரியம் தானிழைத்துப் 675
பசும்பொன் னதனாலே பக்கவளை தான்போட்டுத்
தங்கத்தில் பச்சைவைத்த சங்கிலியும் தான்பூட்டி
உசத்தியுள்ள வேலைகள் [1]உச்சிதமாய்த் தான்முடித்துச்
செல்வப்பூந்தொட்டில் சீக்கிரமாய்க் கொண்டு வந்தான்
வந்ததொரு தொட்டிலைத்தான் மாதியனும் தான்
பார்த்து 680
விசுவகர்ம ஆசாரிக்கு வேண்டும் பணிகளுடன்
உடுவரையும் வெகுமதியும் உச்சிதமாய்த்தான் கொடுத்துப்
போமென்று சொல்லிப் புகலாயனுப்பி வைத்தார்
அந்தநாள் சென்று அடுத்த நாளாம்பொழுது
எண்ணெய் தலையிலிட்டு இளவெந்நீர் தானும்வைத்துத் 685
தீர்க்கமுடன் விரனுக்குத் திறமாகத் தான்வார்த்து
நேரான நெற்றியிலே நிலக்காப்புப் பொட்டுமிட்டுப்
பாலகனைத் தானெடுத்துப் பதறாமல் முலைகொடுத்து
மாணிக்கத் தொட்டிலிலே மைந்தனையும் வைத்தாட்டித்
தாலாட்டுநாள் அப்போது தயவாக மைந்தனுக்கு 690

## தாலாட்டு

ராராரோ ராராரோ ராரரிரோ ராராரோ
என்கண்ணான கண்ணே என்கண்மணியே நித்திரைபோ
மலடி மலடியென்று வையகத்தோர் சொல்லயிலே
மலடியென்ற சத்தம் மறக்கவந்த கண்மணியே
[2]இருசி இருசியென்று எல்லோருஞ் சொல்லயிலே 695
இருசியென்ற சத்தம் இனியடக்க வாகண்ணே
என் கண்மணியே கண்ணாளா கண்ணுறங்கு
ராசாதி ராசனே ராச பரமேஸ்வரனே
கொம்பில்லாச் சர்க்கரையோ எங்கள் குலந்தழைக்க
வந்தகண்ணே
ஏமாந்திருந்து மைந்தன் இல்லையென்று நானிருந்தேன் 700
மாமரத்தின் கீழிருந்து வந்துதித்த கண்மணியே
தவத்தால் பெரியவனே சங்கரனார் பெற்றகண்ணே
பவத்தால் பெரியவனே சங்கரனார் பெற்றகண்ணே

1. சிறப்பாக 2. பூப்படையும் தகுதியில்லாப் பெண்.

பவத்தால் கலிநீக்கிப் பாராள வந்தவனே
ஆருபெற்ற கண்மணியோ அந்தரத்தில் வந்துதித்தாய் 705
[1]பூருவத்தில் நான்செய்த பூசா பலன்தானே
மைந்தனில்லை யென்று மருவியே நானிருக்கச்
சிந்தை கலிதீர்க்கவந்த தெய்வக் குலக்கொழுந்தோ
எதிர்த்தார்க்கு முண்டனே ஏழைக்கிரங்குந் தெய்வம்
இருந்துவரும் படையை வெட்டிச்செயங்
கொள்வானே 710
மன்னவர்க்கு மன்னவனே வரிசிலைக்கு மன்மதனே
கன்னியர்கள் மோகனே [2]கறிசாறிக்குத் தேவேந்திரனே
[3]குஞ்சரங்கள் ஈன்றெடுத்த குலவிளக்காய் வந்தாயோ
[4]பஞ்சாட்சரக் கொடியோ பாராள வந்தாயோ
[5]ஆலமுண்ட கண்டனே அறுமுகனே மாலயனே 715
சீலமுடன் வந்துதித்த செந்தேனே தெள்ளமிர்தே
வீராதி வீரனே வீர துரந்தரனே
சூராதி சூரனே சொல்லுக் கரிச்சந்திரனே
பூருவத்தில் நான்செய்த புண்ணியத்தால் வந்துதித்த
கார்குழலாள் ஈன்றெடுத்த என்கண்ணேநீ
நித்திரைபோ 720
பட்டைவெட்ட போனவிடத்தில் பாங்காகவே வனத்தில்
சட்டமதாய் வந்துதித்த [6]தற்பரனே நித்திரைபோ
பத்தரை மாற்றுயர்ந்த பசும்பொன்னே நித்திரைபோ
ராராரோ ராரிரரோ ராராரோ ராரிரரோ

## நடை

அந்தநாள் சென்று அடுத்தநா ளாம்பொழுது 725
மைந்தன் தனக்கு வகையுடனே நலுங்குமிட்டு
வெந்நீர் தான்வார்த்து வேகமுடன்தான் துவட்டித்
தீர்க்கமுள்ள உச்சித் திருநீறு தானமைத்து
நேரான நெற்றிதனில் நிலக்காப்புப் பொட்டுமிட்டு
நீலவிழிக் கண்களுக்கு நேராக மையெழுதி 730

---

1. முற்பிறவி 2. ...? 3. யானைகள்
4. திருஐந்தெழுத்து — பஞ்சாட்சரம்
5. சிவபெருமான் — நீலகண்டன். 6. மேலானவன்

நெத்திக்குச் சுட்டிகட்டி நிழல்பார்க்கக் கண்ணாடிகட்டிக்
காதிலே மத்திக்காய் கனமாகத் தொங்கவிட்டு
மார்பில் பதக்கமிட்டு வச்ரமணித் [1]தாவடங்கள்
தங்கத்தால் காப்புமிட்டுச் சதிரான மேல்முருகு
இந்தநகை களெல்லாம் இடப்பாகத் தானளித்துச் 735
சக்கிலியன் வீட்டில் தனஞ்சயனும் தான்வளர்ந்து

## குழந்தை வீரையன் என்ற பெயரில் வளர்தல்

வீரையன் என்று விதமாகப் பேருமிட்டு
அஞ்சுவயதில் அரிச்சுவடி தான் படித்துக்
காரிகை நன்னூல் கணக்குப் பெருஞ்சுவடி
பஞ்சாட் சரமும் பரிவாக எட்டெழுத்தும் 740
[2]சறபண பாஷைமுதல் தான்படித்தான் வீரையனும்
பத்து வயதில் பலகலையும் ஆராய்ந்து
கன்னப் பரிசு சமுத்தடித் தோலுமாய்ப்
பச்சைக்கல் ஒண்டிமுத்துப் பாங்காகத் தொங்கவிட்டு
ஒண்டிமுத்துக் கடுக்கன் ஓலைகளும் சோதிமின்ன 745
மோகன மாலை முன்னை [3]எழில்விட
தங்கச் [1]சரப்பளியும் தனிவயிரக் கோவையுமே
மாணிக்கத்தாலே மாதளம் பூக் [1]காவடமும்
கல்கட்டு மோதிரமும் கணையாழி தானணிந்து
பேரான தன்சிரசு புன்னை மலரதுபோல் 750
ஆடும் புருவமும் அம்மானைக்கண் மலரும்
கூடும் புருவமும் [4]கொன்னைக்காய் நெத்தியுமாய்
மூன்றாம் பிறைபோலே முகத்துத் திருவழகும்
நாலாம் பிறைபோலே நாவுத் திருவழகும்
கன்னப் பரிசாகக் கட்டியுள்ள தோலுமாய்த் 755
தோளும் திருவழகும் சொக்கருக்கு ஒப்பிடலாம்
மார்பில் திருவழகும் மாதேவர்க் கொப்பிடலாம்
ஆலிலை போலே அமைந்த திருவயிறும்
வஞ்சிக் கொடிபோலே வாகான தன்னிடையும்
ஆடுந்தொடை இரண்டும் அடிவாழைத் தண்டதுபோல் 760

1. அணி விசேடங்கள் 2. சாபரண என ஏட்டிலுள்ளது.
3. ஒளிவீச 4. கொன்றைக்காய்

கைகளுந் தானும் கனத்ததொரு வாளதுபோல்
குளத்து விராலதுபோல் கொற்றவனார் தன்காலாம்
பருத்த முத்துப்போலே பல்லுத் திருவழகும்
சரிகை காந்திரகூவி தலைப்பாகும் தான்தரித்து
அங்கமெல்லாம் பொன்னிறம் ஆதித்தன் தன்வடிவும் 765

எள்ளுக்கர்பிச் சோமன் ஏகாந்த வல்லவட்டும்
பட்டுக்கம்பிச் சோமன் பாங்காகத் தானுடுத்திக்
கச்சை வரிந்துகட்டிக் கருங்கச்சைச் சுங்குவிட்டுப்
பொன்னால் அரைநாணும் போதவே தானணிந்து
தொட்ட மிதியடியும் சுண்டுவில்லுங் கைப்பிடித்துச் 770

சொற்பேச்சுக் கேளாத துள்ளுகுட்டி வீரையனும்
எதிர்த்து வந்தபேரை இருபிளவை செய்திடுவான்
கண்டதொரு ராசாக்கள் கைகட்டி நிற்பாரும்
காளி கதவடைக்கக் கண்டமுனி தெண்டனிட
மாதியன்சொற் கேளாமல் வனங்களிலே தான்புகுந்து 775

வேட்டை களாடி வேங்கைகளைக் கொல்லுறதும்
கரடிபுலி சிங்கம் காட்டானை கொல்லுறதும்
வேசங்கள் மாறி வீட்டுக்குத் தானும்வந்து
அப்படித் தானும் இருக்குமந்த வேளையிலே

## பொம்மி வயதுக்கு வரலும் மாதியன் காவலும்

பட்டணத்தை ஆளும் பரிவான தொட்டியன்தான் 780
பொம்மணன் ஈன்றெடுத்த பொற்கொடியாள் பொம்மியுந்தான்
பத்துவயதாகிப் பனிரெண்டாந் தன் வயதில்
[1]புத்தி அறிந்தாள்காண் பொம்மியளும் தானும்அப்போ
பச்சைக்குடிசை கட்டிப் பாங்காய் அலங்கரித்துப்
பொம்மி யம்மாளையும் போதவே கூட்டி வந்து 785

பச்சைக் குடிசில் பைங்கிளியைத் தானும்வைத்து
மாதியச் சின்னானை வரவழைத்து அந்நேரம்
பைங்கிளியை நீர்தானும் பத்திரமாய்க் காரும்பிள்ளாய்

---

1. பருவமடைந்தாள்.-முதுக்குறைதல் என இதனை இலக்கியம் இயம்பும்.

முப்பது நாளும் முழிப்பாகவே இருந்து
காரும்பிள்ளாய் என்று கட்டளையும் இட்டார்காண் 790
நல்லதய்யா வென்று நளினமுள்ள மாதியனும்
மாதியச் சின்னானும் வகையுடனே வீடுவந்து
குச்சு உருமாலைகட்டித் குறட்டுத் தடியெடுத்துக்
கச்சை இறுக்கிக்கட்டிக் கறங்[1]குருமால் தானணிந்து
தொட்டமிதியடியும் [2]சுண்டு வில்லும் கைப்பிடித்து 795
வாளுந் தடியும் வளைதடியும் சக்கரமும்
இத்தனையுங் கொண்டு ஏகினான் காவலுக்குப்
பொம்மியுட காவலுக்குப் போறானே மாதியனும்
மாதியனும் போனபின்பு மைந்தனும் தானெழுந்து

## விரையன் ராவுத்தப் படையினர் தொடர்பு

கண்டுவில்லும் கைப்பிடித்துக் கனமதுரை
வாரான்காண் 800
ஆற்றங் கரையோரம் ஆணழகன் வருகையிலே
ஆனைகுதிரை அடர்ந்து தண்ணீர் தான்குடிக்கச்
சேனையின் [3]ராவுத்தமார் சென்றுதண்ணீர் காட்டவந்தார்
வந்தவர்கள் தன்னுடனே மன்ன னுறவாடி
உறவு பிடித்தான்காண் ஒண்டிமுத்து விரையனும் 805
சேரவே கட்டிநிற்கும் சேவுமத யானையைத்தான்
[4]சன்னைகள் சொல்லித் தான்பண்ணி வைத்தார்காண்
[5]உன்னிதமாய் ராவுத்தமார் உத்த(ம)னு மப்போது
ஏற்றிவைத்தார் ஆனையின்மேல் எண்ணமற்ற விரையனை
தவளமத யானையைத் தான்கடிதாய் நடத்திடுவார் 810
மாவுத்த மார்க்குமுன்னே மன்னன்முத்து வீரையன்தான்
நாலு தெரு வீதி நடத்தினரப்போது
மலுக்கர் துலுக்கர் மாற்பாஷைக் காரரெல்லாம்
மதயானை யின்மேலே மைந்தனையும் ஏற்றிவைத்தோம்
அதிரநடத்தி வைத்தான் ஆண்பிள்ளை சிங்கமிவன் 815
என்றுசொல்லி ராவுத்தமார் எல்லோருந் தான்கூடி

---

1. மேலாடை 2. உண்டைவில்
3. படைவீரர்கள் 4. சமிக்கை 5. உயர்வாக.

வீரையனைப் பார்த்து விதமாகவே யுரைப்பார்
மாதியச் சின்னான் வளர்த்தமகன் கேளீரோ
அச்சமில்லை உங்களுக்கு அலைச்சலில்லை கண்டாயே
[1]முச்சிப் பறக்காது முந்நூற்றிக் காதவழி 820
[2]கச்சிப் பதிமட்டும் காவல்[3]கொள்ளும் தீரனென்றான்
என்றுமே சொல்லி எடுத்துரைப்பார் ராவுத்தமார்

## விருத்தம்

இந்திர சால வித்தை
இயல்புடன் படித்துக் கொண்டாய்
மந்திர சால வித்தை
மந்திர வாதி யெல்லாம்
தந்திர மாகச் சொல்லும்
சமர்த்தன் என்று சொல்லிச் 825
சுந்தர முள்ள தானை
துரந்தரர் நீர்தான் என்றார்

## நடை

[4]சேவுகத்திலுந்தனைப் போல் சென்றிட மாட்டார்கள்
காவலுக்கு ஏற்ற கனமான சேவுகன்நீ
எங்களுடன் வந்து இதமாகச் சேர்ந்தாக்கால்
செங்கோல் அரசுபதிசென்ன பட்டணத்தரசன்
முன்னே 830
பட்டத்துக் குதிரைக்குப் பரிந்துமிகச் சேவுகங்கள்
திட்டமுடன் செய்துவைப்போம் சொல்லுமென்றார்
அப்போது
நம்பிக்கை சொன்னார்கள் ராவுத்தமார் எல்லோரும்
நல்லதென்று சொல்லி நகைத்தானே வீரையனும்
இந்தப்படிக்கு இருக்குமந்த வேளையிலே 835
மாதியச் சின்னானும் மைந்தனெங்கே என்று சொல்லித்
தெருவுகள் தோறும் தேடி மிகஅலைந்து

---

1. — ?
2. காஞ்சிபுரம்
3. கள்ளும் என ஓலையில் உள்ளது.
4. சேவை

இன்னும் வரக்காணேமே என்றுசொல்லி மாதியனும்
கன்னல்மொழி மாதியனும் [1]கவடுவந்த தென்றுசொல்லிச்
சூதுகளைத் தான்முடித்துச் சொல்லுக்கிடமானேமே 840
என்று டரிதவித்து ஏங்கி இருக்கையிலே
வந்தானே வீரையனும் வாகுடனே அப்போது
கண்டானே மைந்தனையும் கண்கள்களி கூர்ந்திடவே
அப்போது வீரையனும் அதிகபய பக்தியுடன்
தகப்பனைக் கண்டு தான்மகிழ்ந்து நிற்கையிலே 845
ஓடி எடுத்து உகந்தணைத்தான் மார்போடே
அப்போது சொல்வான் அடவாக மாதியனும்
அப்பா மகனே அறிவுள்ள கண்மணியே
இந்நேர மட்டும் இளைப்பா யிருப்பானேன்
காரியம் என்னஐயா கண்மணியே சொல்லுமையா 850
அப்போது வீரையனும் அப்பன்முகம் தானோக்கிக்
கப்பளத்தார் மக்கள் கனமாக வேட்டைசெய்து
வாரதைப் பார்த்திருந்தேன் வாகாக என்தகப்பா
என்று சொல்ல வீரையனும் இதமாக மாதியனும்
அப்போது சொல்வான் அழகுள்ள பாலனுக்கு 855

## கொச்சகம்

படித்து முடித்துப் பலகலையு மேயோதி மாமரத்தின்
செடிக்குள் பிறந்தபிள்ளாய்ஒரு சேதிசொல் லக்கேளாய்
வடிப்பமாய்வந்தவர்க்கும் வானவர்க்கும் இந்திரர்க்கும்
படிப்பினைகள் சொல்லவந்த [2]பரராச கேசரியே 860

## நடை

என்றுதான் வாழ்த்தி எடுத்தணைத்தான் மாதியனும்
மைந்தனுடனே மகிழ்ச்சியாய் மனைப்புகுந்தான்
ஆளில் அழகன் அகலமுள்ள மார்பனுக்குப்
பொன்னின் கலம்விளக்கிப் புதுநீர் பரிமாறிச்
சின்ன சம்பாஅரிசி அமுது பரிமாறப் 865
பருப்பு பொரிக்கறியும் பாற்குழம்பு தான்வார்த்துப்
புத்துருக்கு நெய்யும் பொங்கலுடன் தான்வார்த்து

1. கபடம் 2. மாற்றரசர்களுக்குச் சிங்கம் போல்வான்.

எண்ணுங் கறிவகையும் எருமைத் தயிர்வார்த்து
உண்ணும் உண்ணுமென்று உபசரித்தாள் பாலகனை
சீருடனே படைத்த செய்யஅமு திட்டாளே 870

வாரி அமுதுசெய்து வன்னமணி வாய்பூசி
மல்லிகையும் செண்பகமும் வாய்த்த இருவாச்சியுடன்
முல்லை மலர்ச்சரமும் முடிமீதிலே தரித்துக்
காதில் புனுகணிந்து கஸ்தூரிப் பொட்டுமிட்டுச்
சாந்து சவ்வாதுடனே சந்தனஞ்சேர் குங்குமமும் 875

1கெந்தபொடிக் கதம்பக் கிரமமாய்த் தானணிந்து
அந்தமுள்ள 2புசத்தில் அழகாகத் தான்3திமிர்ந்து
வெத்திலையும் 4அரிபிளவும் வேதித்த சுண்ணாம்பும்
அள்ளி யெடுத்து அலர்ந்து மலர்க் கையாலே
இந்தப் படித்தான் இருக்கின்ற வேளையிலே 880

## வீரையன் யார்க்குமடங்கா வீரனாக விளங்கல்

பனிரெண்டு வயது பாங்குடனே சென்றதப்போ
வாகுபெறத் தானும் மயிர்வளர்க்க வேணுமென்று
நாகரீகமாக நலமா மயிர் வளர்த்தான்
கொண்டை மிகஎழுதிக் குறிஞ்சிவிழி மையெழுதி
உல்லாச மாக உருமாலுந் தானுங்கட்டிப் 885

பட்டுக்கச்சை ஒட்டியாணம் 5பருஞ்சூரி பாங்கணிந்துச்
சந்திர காவிச் சரிகைவர்ணத் துப்பட்டியும்
முன்கையில் சந்தனமும் முறுக்கிவிட்ட வீசைகளும்
மேல்முருகு தானணிந்து வீரப்பட்டம் தான்தரித்துப்
பச்சைக்கல் கடுக்கன் பாங்குடனே காதிலிட்டுக் 890

காலுக்கு மிஞ்சி கனமாகத் தானணிந்து
எண்ணத் தொலையாத இயல்பான ஆபரணம்
வண்ண வடிவழகன் மகராசன் தானணிந்தான்
துய்யதொரு வட்டுவமும் தோள் மீதிலேயணிந்து
6கவள மத யானையினைக் கட்டவிழ்த்து விட்டதுபோல் 895

---

1. வாசனைப்பொடி 2. மார்பு 3. பூசி
4. வெட்டியபாக்கு 5. கத்திவகை.
6. உணவு உருண்டை.

பவளநிற வுதடும் பத்தரானைச் சத்தமும்போல்
தொட்டமிதியடியும் கண்டு வில்லுங் கைப்பிடித்துச்
செல்லுகனும் கேளானும் துள்ளுகுட்டி வீரையனும்
ஆருக்கு மடங்கானும் ஆண்மையுள்ள வீரையனும்

## வீரையன் கங்கையாட விரும்புதல்

அன்னையே பொன்னை அருவியதோர் மாதாவே 900
சொல்லவே கேளும்மா தோகை உமையாளே
துய்யதிருக் கெங்கையிலே தோன்றும் புதுநீரில்
நேசமுடன் சென்று இப்போ நீராடி வாரேனம்மா
எந்தனையும் நீயுமிப்போ இசைந்தனுப்ப வேணுமென்முன்
சொன்ன சொல்லைக்கேட்டுத் தோகையவள்
மாதாவும் 905

1தாராரும் திண்புயத்தான் தாட்டாளன் வீரையனே
நீராட வேணுமென்று நீதான் நடந்தாக்கால்
கால்கள் வலித்திடுமே கண்ணேறு பட்டிடுமே
பாலகனுன் மேனியிலே பருவேர்வை வேர்த்திடுமே
பிள்ளைஇல்லாள் கண்டால் பெருமூச்சுத் தான்விடுவாள் 910
நல்லபுது நீரு நானெடுத்து வாரேனிப்போ
போகவே வேண்டாம் புத்தியுள்ள கண்மணியே
என்றுசொன்னாள் தாயாரும் இன்பமுள்ள பாலனுக்கு
அப்போது வீரையனும் அவையுடனே ஏதுசொல்வான்
என்னமொழி பேசுகிறாய் என்தாயே மாதாவே 915
பட்சிகள் முட்டையிட்டுப் பரித்துக்குஞ்சு தான்
பொரித்தால்
இறகு முளைத்தாக்கால் இருக்குமோ ஓரிடத்தில்
குழந்தை உருமாறிக் கொழுவுசதிர் முடித்து
வளர்த்த 2பேர் தானும் வளவிலிருப்பார்களோ
உன்வசனந் தான்கேட்டு உன்னிடத்தில் நானிருந்தால் 920

---

1. மாலை அணிந்துள்ள
2. பருவமும் கலையும் நிறைந்து அரங்கேறிய மடந்தையர்

## கண்டவர் மயங்கும் காளை

மன்மதன் போலே இவ்வையகத்தில் கண்டதில்லை
காமன் கணைக்குக் கனத்தாண வாளனிவன்
கூடுவனோ நம்முடனே என்றுதான் கோதையர்கள்
சொன்னார்க ளப்போது தோகையர்கள் எல்லாரும்
கந்தன் வடிவேலவரும் [1]கருப்புச் சிலை வளைத்தான் 925
மாதியர் சொன்னான் மகிபாலனுக்கு ஒவ்வாது
உலகந்தனில் இவனை ஒருபோதும் கண்டதில்லை
நிலவறையில் தானும்வைத்து நேசமுடன் வளர்த்தாரோ
ஆளில் அழகனுமாய் ஆனந்த ரூபனுமாய்க்
காணும் பொழுதில் அவனைக் கன்னியர்கள்
சேர்வமென்பார் 930
[2]ஏலக் கருங்குழலார் இவ்வார்த்தை தானுரைக்கக்
கால் கடிய விரையற்குக் காதில்அதுகேட்டுக்
கன்னியர்கள் தன்னைக் கடைக்கண்ணால் பாராமல்
நன்றாக வீதியிலே நடந்தானே விரையனும்
நன்னகர் விட்டு நடந்து வருகையிலே 935
வாழ்வாளி துர்க்கையம்மாள் வாழுகின்ற கோவிலைத்தான்
பக்கத்தி லாயிரம்பேய் [3]பரிவுடன் நிற்கிறதும்
கொக்கரித்துக் கூத்தாட கோடிபேய் தான்கோடி
விலங்கிலே போட்டிருக்கும் விரமுனி தான்கோடி
ஆகாசத்தை முட்டும் அரியமுனி தான்கோடி 940
கண்டானே விரையனும் காளியுட சன்னிதியில்
காசிவிசுவ நாதரையும் கருத்தில் மிகநினைந்து
கொண்டாடிக் கொக்கரித்துக் கோலமுள்ள விரையனும்
பார்த்து மனமகிழ்ந்து பத்திரகாளி கோவிலைத்தான்
வருந்தி அழைக்கவில்லை மாகாளி என்று சொல்லி 945
ஏத்தமுடன் நாமிவளுக்கு ஏற்கவே செய்வமென்று
ஈனாத வாழை இளவாழை தான்முரித்து
[4]மாங்கிஷக் காவடிதான் வகையாக உண்டுபண்ணி

---

1. கரும்பு வில், 2. தலைமுடிக்கிடும் வாசனைப்பொருள்
3. பெற என்று ஏட்டிலுள்ளது.
4. மாமிசம்

## வீரையன் தன் வரலாறு கூறலும், கேட்டுக் காளி வரமளித்தலும்

சிந்தை மகிழ்ந்து சிறுவனையும் தான்பார்த்து
மெத்தச் சிறியவன்நீ வீரியங்கள் போதாது 950

சற்றும் பயமில்லாமல் தயவாக இங்குவந்தாய்
உன்பேருடன் ஊரும் பிறந்து வளர்ந்ததுவும்
ஆருமகன் நீயெனக்கு அறிய உரையுமென்றாள்
மாகாளி ஈஸ்பரிக்கு மகராசன் வீரையனும்
தேன்சிறந்த கொன்றையணி செம்பொன்
திருச்சடைச்சி 955

நான்பிறந்த சேதியெல்லாம் நலமாகக் கேட்டருள்க
வெள்ளிமலை தனிலே வேலுடனே திருக்குமரன்
முப்புரத்தை எரித்த முக்கணூர் புத்திரன்நான்
இப்பிறப்பு ராசகுலம் ஈஸ்பரனூர் சொற்படிக்கு
மானிடச் சென்மமதாய் மானிலத்திலே பிறந்து 960

பின்னையொரு சாதியிலே பிற்பாடு நான்வளர்ந்தேன்
கன்னி சிறையெடுத்துக் கனமதுரை போய்ச்சேர்ந்து
அங்கேயொரு கன்னிகையை அடைவாய்ச் சிறையெடுத்து
மீனுட்சி பாதம் விருப்பமுடன் அணைந்து
பின்னும் உலகுதன்னில் பேர்பெரிய தேவதையாய் 965

மும்மூர்த்தி களுக்கு முன்னேடுஞ் சேவகனும்
நன்மூர்த்த மாகவரம் நல்கினூர் ஈஸ்பரனும்
நன்றாகக் காசியிலே நாராயணன் வயிற்றில்
நான்தான் பிறந்தேன் நாள்ஆகாது என்றுசொல்லிக்
காட்டில் எறிந்துவிட்டார் கண்டுபெருஞ் சக்கிலிச்சி 970

ஏத்திமிக எடுத்து என்னைஅவள் வளர்த்தாள்
வீரையன் என்று விதமாகப் பேருமிட்டுப்
போற்றி வளர்த்தாள் புதல்வனிலும் எண்மடங்கு
கன்னியவள் தானும் காசினியி லப்போது
கம்பளத் தாரிடத்தில் கனமாய் வளருகின்றாள் 975

அரனூர் வயதுபதி னாறில் வாருமென்று
வரமானது எனக்கு வழங்கினூர் மாதாவே
பத்துடனே அஞ்சும் பார்தனிலே சேர்ந்ததம்மா

உத்தவய தெனக்கினி ஒன்றுதான் கண்டீரோ
[1]சித்தா மடந்தையரைச் சிறைதா னெடுத்துவர 980
எனக்குத் துணையாக ஈஸ்பரி நீயும்வந்து
என்னவரங் கேட்டாலும் எனக்கு நீதந்தருள்வாய்
வரம் வேணுமென்று வகையுடனே இங்குவந்தேன்
என்றுசொல்லி வீரையனும் இனமாய்த்
தெண்டனிட்டன்
அப்போது துர்க்கையம்மன் அதிகபிரிய முண்டாய் 985
நினைத்தவிடந் தனக்கு நிச்சயமாய்த் தானும் வந்து
உற்றதுணையாக வந்து உதவிசெய்வேன் தப்பாமல்
என்று வரங்கொடுத்தாள் ஈஸ்பரி மாதாவும்
வரம் வாங்கிக்கொண்டு வழிநடந்தான் வீரையனும்

## கங்கையாடி வீடு திரும்பல்

கெங்கைக் கரையில் கிருபையுடன் வந்துநின்று 990
நீராட வேணுமென்று நெடியமயி ரவிழ்த்துக்
கச்சை யவிழ்த்துக் கருங்கச்சை தானவிழ்த்துப்
பச்சை யவிழ்த்துப் பருங்கச்சை தானவிழ்த்து
அருவே குருவேயென்று ஆடினார்காண் தீர்த்தம்
தாய் தந்தையர்க்குத் தானுடினார் மகாதீர்த்தம் 995
பொன்னுலகம் வாழ்கவென்று புண்ணியனார் நீராடி
முக்காலம் நீரில் மூழ்கிக் கரையேறிக்
கூந்தல் விரித்துக் குளிர்ந்த மயிர் ஆர்த்தி
ஆய்ந்த மயிரை அழகா முடிபோட்டுச்
சரிகை உருமாலை தலைமறை தானணிந்து 1000
சந்திர காவிச் [2]சல்லடமும் தான்போட்டுப்
பட்டுக்கச்சை ஒட்டியாணம் பாங்காய் வரிந்துகட்டி
மேகவர்ணப் பட்டு விரித்திடையி லேதரித்து
[3]வாகுதார் பெரியகத்தி வலதுபுறந் தானணிந்து
மார்பு நிறைய வச்சிரப் பதக்கமிட்டுக் 1005
காது நிறையக் கடுக்கன் மிகவணிந்து
கண்டசரம் பூண்டு கனத்த பதக்கமிட்டு

1. சித்தாக 2. காற்சட்டை 3. —?

முன்கை முதாரியிட்டு முறுக்குவளை தான்போட்டுக்
கைவிரலுக் கேற்ற கணையாழி தான்தரித்து
உன்னத மாயிருக்கும் உசந்தஅரை நாண்பூண்டு 1010
[1]வீரதண்டை தானணிந்து வெற்றியணி பூண்டு
நெற்றியில் நீறணிந்து நீலவர்ணப் பொட்டுமிட்டுக்
கஸ்தூரி பூசிக் கனத்த சவாதணிந்து
வெள்ளிமலை [2]ஈஸ்பரனை வேண்டி யடிபணிந்து
இடப்பாகம் தானிருக்கும் ஈஸ்பரியைப் போற்றி
செய்து 1015
வரிசை யுடனே வணங்கி மிகத்துதித்து
விராதி வீரையனும் விரவாள் தானெடுத்து
நடந்தானே வீரையனும் நன்னகரைத் தானோக்கி
மங்கையர்கள் கண்டு மதிமயங்கிப் பின்தொடர
மாயமாய்த் தானடைந்து வந்தானே மாளிகைக்கு 1020
கண்டாளே மாதாவும் கண்கள் களிகூர
மகனை மிகப்பார்த்து மஞ்சநீர் சுற்றுமென்றாள்
சொன்ன வுடனே தோகையர்கள் தாதியரும்
முத்தினால் ஆலாற்றி முந்நூறு தான்சமைத்துப்
பவளத்தால் ஆலாற்றிப் பத்துலட்சம் தான்முடித்து 1025
இத்தனை ஆலாற்றும் இதமாகச் சுற்றுமென்றார்
ஆலாற்றி சுற்றியபின் ஆசனமும் தான்போட்டு
அப்படித் தானும் அவனிருக்கும் வேளையிலே
மாதியச் சின்னான் வகையாக அந்நேரம்
தொட்டியப்பெண் காவலுக்குத் துருசாகக்
காத்திருந்தான் 1030

## வீரையன் பொம்மி காவலுக்குச் செல்லல்

இருபத்தி யேழாநாள் இதமாகத் தானுமங்கே
ஒருநாள் ஒருபொழுதில் உலகமெல்லாம் தானிருளாய்
ஈரேழுலக மெல்லாம் இருளாக முடிகிறதே
வயதுசென்ற மாதியனும் மனதுநொந்து மெய்கலங்கி

1. வீரர் அணியும் காலணி — வீரக்கழல்.
2. ஈஸ்பரனே அவனடி பணிந்து என ஓலையில் உள்ளது.

பொம்மியம்மாள் காவலுக்குப் போகவே
வேணுமென்று 1035
இந்த மழைக் காலிருட்டில் என்னவென்று நான்
போவேன்
என்றுசொல்லி மாதியனும் இயல்பாக மகனுடனே
சொல்லவே கேட்டுத் துருசாக வீரையனும்
இந்தமழைக் காலிருட்டில் எப்படித்தான் நீர்போவீர்
பிள்ளையென்று நானிருக்கப்பெரியவர் ஏன்போறீர்
என்றான் 1040
மங்கையுட காவலுக்கு வகையாக நான்போறேன்
என்றுசொல்லி அப்போது எடுத்துரைத்தான்
தென்மதுரை
வெந்நீரில் தான்குளித்து மேலெங்கும் சுத்திபண்ணிச்
சம்பங்கி எண்ணெய்கொண்டு தலைசீவித் தான்முடித்துச்
சீரான நெற்றிக்குத் திருநீறு தான்சாத்திச் 1045
சந்தனங் கஸ்தூரி தானணிந்து வீரையனும்
பச்சைப் புனுகு பரிவாகத் தானணிந்து
அல்லித்துறைக் கதம்பர் ஆண்டியப்பன் கெந்தப்பொடி
கெந்தப்பொடிகள் தூவிக் கிறினான் தன்மார்பில்
தட்டுசல்ல டம்போட்டுத் தயவாக அப்போது 1050
கச்சை யதுமேல்கட்டிக் கருங்கச்சை சுங்குவிட்டுத்
திருநெல்வேலிச் 1சோமன் திறமாகத் தானுடுத்திப்
பச்சைவர்ணப் பாவாடை பாங்காகவே போட்டுக்
காதில் கடுக்கனிட்டுக் கழுத்தில் சரமணிந்து
மாணிக்கக் கல்பதித்த வயிரப் பதக்கமிட்டுப் 1055
பச்சைக்கல் முருகு பாங்காகத் தானணிந்து
கல்கட்டு மோதிரமும் கையிலேதான் போட்டு
வீரதண்டை யோசையிட வெள்ளிச்சதங்கை மின்ன
தங்கக்க டயம்மின்ன சாம்பிராணி வாசமுடன்
மல்லிகை முல்லை மருக்கொழுந்து தானணிந்து 1060
பிச்சி இருவாச்சி பேரான வெட்டிவேரும்
புட்பசாதி உள்ளதெல்லாம் போதவே தானணிந்து

---

1. வேட்டி

மாயாவு தாரணைப் போல் மதுரையும் வேசங்கொண்டு
போசன மாளிகையில் போய்ப்புகுந்தான் வீரையனும்
ஆசனமும் போட்டு அடைவாகத் தானிருந்து 1065

தங்கத்தாம் பாளமதில் சாதம் பரிமாறி
பரங்கிக்காய்ப் பச்சடியும் பாவக்காய்ப் புளிக்கறியும்
பாற்குழம்பு [1]தோரையும் பாங்கான அப்பளமும்
இத்தனையுங் கொண்டுவந்து இன்பமாய்த் தான்படைத்தாள்
சாப்பிட்டு கைப்பாறிச் சாமி முத்து வீரையனும் 1070

பாக்குடனே வெற்றிலையும் பண்பாகவே அருந்திக்
கச்சை இறுக்கிக்கட்டிக் கருங்கச்சைச் சுங்குவிட்டு
இடதுபுறஞ் சுங்கிலேதான் எமனுடைய அட்சரமாம்
வலதுபுறஞ் சுங்கிலேதான் வடமலையான் அட்சரமாம்
மாடறுக்குஞ் சூரி வலதுபுறம் தான்செருகிக் 1075

[2]கண்ணறுக்குஞ் சூரி கையிலேதான் பிடித்துச்
[3]சமுதாடு கட்டாரி சதிரான நேருசமும்
வாளுத் தடியும் வளைதடியும் சக்கரமும்
காலிலே வில்லை கனத்த மிதியடியும்
கண்டுவில்லுங் கைப்பிடித்துச் சொகுசாகத்
தானெழுந்து 1080

[4]அடைக்காயும் வெள்ளிலையும் அடைவாகத் தானருந்தி
மாதியச் சின்னானை வந்துகண்டான் தென்மதுரை
பொம்மியுட காவலுக்குப் போய்வாரேன் என்றுசொன்னான்
தொட்டியப் பெண்காவலுக்குப் போய்வாரேன் என்று
சொன்னான்
மகராசன் போலே வருவாய்நீ கண்மணியே 1085

என்றுசொல்லி மாதியனும் இதமாய் அனுப்பிவைத்தான்
பொம்மியம்மாள் காவலுக்குப் போரானே தென்மதுரை
மழைக்கண் இருட்டில் வழியும் தெரியாமல்
குறுக்கே மிதித்தான்காண் கொள்ளைகொண்ட வீரையனும்
மதுரை நடக்க மலைகளெல்லாம் தத்தளிக்க 1090

காளி கதவடைக்கக் கண்டமுனி [5]தெண்டனிட
எதிர்வந்த முனிகளெல்லாம் இருபிளப்பாய்ப் போய்விடுமா

---

1. தோன என்று ஓலையில் உள்ளது 2. கன்று அறுக்கும்
3. ஆயுதவகைகள் 4. பாக்கு, வெற்றிலை 5. வணங்க.

மண்ணும் மதிர மழையும் பொழியு மப்போ
மின்னல் வெளிச்சத்தில் மிதித்தே போருன்காண்
சிங்காரத்தோப்பு தெப்பக்குளம் போய்ச் சேர்ந்தான் 1095
மழையும் பொழியுதே மாதியனைக் காணமென்று

ஃ ஃ ஃ

## விரையன் பொம்மி விவாதம்[1]

பொல்லாதவன் என்தகப்பன் கத்திக் கிரையிடுவான்
பிழைத் தோடிப் போய்விடு நீசும்மா
மழைக் காலிருட்டுமின்ன மாரிபொழியுது வலுவாக
பேசுகிறவனாரடி மன்னன்கம்பளத்தான் வலுவுகள்
மெத்தவுண்டு 1100
வனத்தில் பேச்சுக்கா சொல்லாதடா
வையகத்தில் மெத்த பேசாதடி
கஸ்தூரி பொட்டுமிட்டுக் காதில் புருகணிந்து
கடிதாக நின்று பேசாதடா
காட்டுக் குடுசில்கட்டிக் கள்ளிதனைப் போலிருந்து 1105
கண்ணால் மெறட்டுறவ ஆரடி
கன்னமிட்டு நவகளவு செய்ய வந்தவனே
கடிதாய் எழுந்திருந்து போடா நீ

### நடை

என்றுதான் சொல்லி எடுத்துரைத்து வைதாலும்
அஞ்சாமல் நிற்கிறவன் ஆரோ தெரியவில்லை 1110
மாதியனு மல்லஇவன் மாற்றானாய்த் தோணுகிறான்
ஆரென்று.........................................................
ஆரடா திருடனவன் அஞ்சாமல் சொல்லுமென்ன
அப்போது தென்மதுரை ஆண்டவனுந் தான்கேட்டு
ஆரென்று சொல்லி அஞ்சாதே மங்கையரே 1115
மாதியனும் தான்வளர்த்த [2] மகிபாலன் நான்தாண்டி
இருட்டென்று சொல்லி என்னை அனுப்பிவைத்தான்
மங்கையரே காவலுக்கு வந்தேனடி நான்தானும்

1. ஏடின்மையால் தொடர்ச்சி இடையறவு பட்டுக் படுகிறது 2. மன்னன்.

அப்படிச் சொல்லி எடுத்துரைத்தான் வீரையனும்
செப்பியதைத் தான்மாது தேன்மொழியாள்
தான்கேட்டு 1120
நல்லதென்று சொல்லி நளினமுள்ள நாயகியும்
பைங்கிளியாள் உட்புகுந்து படலெடுத்துச் சாத்தியபின்
கட்டிலின் மேலிருந்து கன்னியரும் ஏதுசொல்வாள்
பத்திரமா தானும் படுத்திருடா என்று சொன்னாள்

## வீரையன் பொம்மியின் குடிசில் நுழைதல்

அப்போது தென்மதுரை அவள்வார்த்தைக்
கேதுசொல்வான் 1125
1பொட்டெனவே போய்ப்ப டுத்தாய் பெண்ணேநீ
ஓண்டி ஒருவனுமாய்த் 2உறுகாந்தா யிருப்பேனோ
தனியே ஒருவனுமாய்த் தனித்து இருப்பேனோ
மங்கையரே நானும் மழையில் நனையுறதும்
ஆரென்று சொல்லி அஞ்சாதே மங்கையரே 1130
அவனுக்கொரு மகன்தான் ஆண்மையுள்ள சேவுகன்நான்
மாதியன் குலத்தை வகையா யறுக்கு முன்னே
தொட்டியன் தன்குலத்தைச்சுருக்கா அறுப்ப னென்றான்
மாகாளி தன்னருளால் வாளெடுத்தே னாகில்
வெட்டிச்சரிப் பிடிக்கும் வீரையனும் நான்தாண்டி 1135
மாதியன் மைந்தன் மகாபலவா னென்றிருக்கப்
பயமுறுத்த வேண்டாம் பாங்கான பொம்மியரே
3பில்லிக்கு முண்டனடி பேய்க்குக் கோடாலியடி
மந்திரக் காரனுக்கு மார்புக்கு ஆணியடி
தொட்டியர்க்கு நானும் 4துண்டரிக் முள்ளவண்டி 1140
கட்டி அணைந்தால் கனதருமம் உண்டடிதான்
உன்னையும் பார்த்தால் எனக்குப் பரிமளங்களாகுதடி
காமனும் வந்து கண்மயக்க மாகுதடி
விம்முதடி உன்மேலே மெத்தமயல் வந்தெனக்கு
ஆண்பாவம் பொல்லாது அவக்கேடு வந்துவிடும் 1145

---

1. விரைவாக 2. — ? 3. ஒருவகைப் பேய்
4. தொந்தரவு.

பெண்ணுங்கொரு ஆணென்று பிறப்பித்தார் தேவனரும்
அப்படிப்போலே நாமிருவர் ஆனோமடி பொம்மியரே
பெண்ணென்று பிறந்தால் ஆணிடத்தில் சேரவேணும்
அந்தநினைவே வுனக்கு அருங்கிளியே இல்லையோதான்
ஈயெறும்பு சாதிமுதல் எல்லோர்க்கு முண்டடிதான் 1150
என்று சொல்லித் தென்மதுரை இதமாயு ரைக்கலுமே

## பொம்மி புலம்பலும் வீரையன் தன்வரலாறு கூறித் தேற்றலும்

அடைவுடனே பொம்மி அழுகலுற்ருள் அப்போது
ஐயோ சிவனே ஆதி ரகுராமா
சிருஷ்டித்த பிரம்மாவே தீவினைகள் எழுதினையோ
கலியாண மாகாமல் கன்னி கழியாமல் 1155
சக்கிலியன் தானழிக்கத் தலையில் எழுதினியோ
இந்த விதிகளுக்கா பிறந்தேன் நான் இப்புவியில்
என்றுசொல்லிப் பொம்மி இயல்பாகத் தானழுது
மாரளவு கண்ணீரைச் சோரவிட்டுத் தான்அழுது
அழுதுமுகம் வாடி அவளிருக்கும் குடிசில் தனில் 1160
மதுரை மகாமுனியும் மண்டியிட்டு உள்நுழைந்து
உள்ளே நுழைந்து உட்கார்ந்தான் வளமடியில்
ஏந்திழையே அன்னமே உனக்குஎன்ன [1]விசாரமடி
மலைபோலே நானிருக்க மங்கையரே உந்தனுக்குக்
கல்போலே நானிருக்கக் கலங்காதே மங்கையரே 1165
மனது கலங்காதே மங்கையரே என்றுசொல்லித்
துடைத்தானே கண்ணீரைத் துய்யதொரு மங்கையர்க்குத்
தோளிலே போட்டிருந்த துப்பட்டித் தோகையினுல்
அப்போது மங்கையரும் அன்பாகத் தானிருந்தாள்
மனதுகுளிர்ந் திருபேரும் [2]வைபோக மாயிருந்தார் 1170
ஏறிட்டுப் பார்த்தாள்காண் எண்ணமுற்ற வீரையனைக்
கண்குளிரப் பார்த்துக் கன்னியரும் ஏதுசொல்வாள்
சக்கிலியனென்று சொல்லித் தட்டிமிக வார்த்தை
சொன்னேன்

---

1. மனக்கவலை 2. இன்பம்

முன்னழகும் பின்னழகும் மூவுலகில் கிட்டாது
மார்பழகைக் கண்டால் மங்கையர்கள் தான் விழுவார் 1175

தோளழகைக் கண்டால் தொடருவார் கோடிபெண்கள்
காலழகைக் கண்டால் கன்னியர்கள் மையல்கொள்வார்
சக்கிலியன் தானும் படைத் தனஞ்சியனைப் போலேநீர்
என்றுசொல்லிப் பொம்மியரும் இன்பமாய்த் தானிருந்து
கண்களிற் கண்டு கன்னியருந் தான்மயங்கி 1180

விழுந்தாளே அப்போது வீரையன் தன்மடியில்
விழுந்தவளை வீரையனும் விதமாகத் தானெடுத்துச்
சந்தனங் கஸ்தூரி தான்தரித்தான் வீரையனும்
மல்லிகைப்பூப் செண்பகப்பூ வகையாகத் தான் முடித்துப்
புனுகு சவ்வாது பொங்கமுடன் தானணிந்து 1185

மங்கையரும் அப்போது வாகான மெத்தையின்மேல்
சாய்ந்து படுத்துச் சந்தோஷமாய் வந்துசொல்வாள்
என்னை 1வலதழிக்க எத்தனை நாள் தவசிருந்தீர்
மகாதேவ ரவருமே மண்பிடித்துப் போடயிலே
மன்னவரே எந்தனுக்கு வளர்ந்திரோ பூமியிலே 1190

என்றுசொல்லித் தானும் இருபேரும் மெத்தையின்மேல்
அடைக்காயும் வெள்ளிலையும் அடைவாகத் தானருந்தி
இருபேரு மாக இஷ்டமுடன் தானிருந்தார்
இருந்து விளையாடி ஏந்திழையாள் அப்போது
கட்டிலை விட்டிறங்கிக் கன்னியரும் ஏதுசொல்வாள் 1195

கர்த்தாவே யென்று காலில் விழுந்தழுதாள்
தென்மதுரை தன்பாதம் தெண்டனிட்டா ளப்போது
தெண்டனிட்ட மங்கையரைத் தென்மதுரை தானெடுத்து
ஏந்திழையாள் பொம்மியரை ஏறிட்டுத் தான்பார்த்துக்
கன்னியரே நீர்தான் காலில் விழுந்ததென்ன 1200

என்றுசொல்லி வீரையனும் இன்பமுடன் தான்கேட்டான்
அப்போது பொம்மியரும் அடைவாகச் சொல்லலுற்ருள்
வாருங்காண் மன்னவரே வார்த்தைசொலக் கேளுமினி
மானிடவர் தானோ மகாதேவர் நீர்தானோ
இவ்வுலக ராசாவோ ஈஸ்பரனர் கண்மணியோ 1205

---

1. — ?

ஆர்பெற்ற கண்மணியோ ஆண்டவனே
சொல்லுமென்றாள்
தாய்தகப்பன் பேரும் தனஞ்சியனே சொல்லுமென்றாள்

## விருத்தம்

என்னவென் றுரைப்பேன் பெண்ணே
என்தலை எழுத்தை யாறும்
இன்னமே சொல்வா ரிப்போ
யாரென்று வைய கத்தோர்
உன்னைத் தார்தற் சூழ
ஒருகுடை ஆளவேணும் சீமை 1210

புண்ணியஞ் செய்யாப் பாவி
(வந்து இத்) தார் குலத்திலே1

குலத்திலே சத்திரி யன் (நான்)
ஒருவரைத் தீண்டாச் சாதி
சலத்திலே முழுகிக் காசி
விசாலாட்சியைப் பணிவ தல்லால்
செலத்திலே எனையார் காணார்
தேசத்தார் அறிய மாட்டார்
உலகத்தில் அறியா ரென்று
ஓங்கியே அழுக லுற்றான் 1215

சனியனும் பற்றி வந்தான்
தாய்தந்தை அகல விட்டார்
முனிவரும் தேவ ராகும்
முன்னொரு பிறப்பி லேதான்
அனியாயம் செய்தே னென்னை
யானுமே இன்னா னென்று2
இனியென்ன செய்வே னென்று
ஏங்கியே அழுக லுற்றான்

---

1. இவ்வரி சரியாக இல்லை 2. வரி சரியாக இல்லை

அந்தணர் சொல்லைக் கேட்டு
ஐயரும் மெய்தா னென்று 1220
மைந்தனைக் கொண்டு போகி
வனத்திலே போடு மென்றார்
கந்தனு ரருள வந்த

.........................................

வந்தவிதி இப்படி யென்று
வாடியே அழுக லுற்றான்

புலம்பி நீ அழுக வேண்டாம்
பெண்சாதி ஆனே னிப்பால்
தளும்பியே அழுகவேண்டாம்

.........................................

விளம்பிய வார்த்தை போதும்
விசேடமே உரைக்க வேண்டாம்
வளம் பெற உரைத்த சொல்லை
[1]மறப்பனோ உற்ற கோவே. 1225

## நடை

கயிலாச நாதர் கடாட்சஅரு ளாலேதான்
காசிநகர் ராசனுக்குக் கண் மணியாய்த் தான்பிறந்தேன்
மாலையிட்டுத் தானும் வகைமோசமாய்ப் பிறந்தேன்
கொடிசுற்றித் தானும் கோதையரே நான்பிறந்தேன்
மாலைசுற்றித் தான்பிறந்தால் மாமனுக்கு
ஆகாதென்று 1230
கொடிசுற்றித் தான்பிறந்தால் கோத்திரத்துக்
காகாதென்று
வனத்தில் குடியிருந்து மாதியன் வீட்டில்வந்தேன்
மாதியன் வீட்டில் வளர்ந்தேனடி பெண்மயிலே
மங்கையருந் தான்கேட்டு மனமகிழ்ச்சி யாகவுந்தான்
கட்டிலின் மேலிருந்து கன்னியரும் ஏதுசொல்வாள் 1235
நாளைப் பொழுதில் நாசரீகம் பேசுவீர்காண்
பொழுதுவிடியு முன்னே போய்ப்பிழையு மன்னவனே
இப்படிக்குத் தான்பேசி இருக்குமந்த வேளையிலே

1. மாறப என துற கோவே என ஏட்டிலுள்ளது

## விடியலில் வீரையன் வீட்டிற்குத் திரும்புதல்

கங்குல் விடிந்து கதிரோனும் வந்துதித்தான்
தேன்மொழியாள் குடிசைவிட்டுத் தென்மதுரை
வெளியில்வந்து 1240
தெப்பக்குளக் கரையில் தீர்க்கமுடன் வந்திறங்கிப்
பாலைகொண்டு பல்விளக்கிப் பனைஓலைகொண்டு
நாவழித்துக்
காலுமுகஞ் சுத்திபண்ணிக் கருத்துடனே வீரையனும்
சிவசிவா வென்று திருநீறு தானணிந்து
அரகரா வென்று அரனாரைப் பூசை செய்து 1245
உல்லாசமாய் நடந்து உத்தமியாள் புத்திரனும்
மாதியன் வீடுதேடி வாரானே வீரையனும்

1 ———— அப்போது
———— மிகப்பார்த்து
———— என்ன
———— செய்தான் வீரையனே
————ான் இதமுள்ள
———— மாதியனும்
———— ஆண்டவனார்
———— வீரையனும்
———— மாதாவே
———— தூங்கி விட்டேன்
———— நினைக்க வேண்டாம்

என்று சொல்லித் தென்மதுரை இதமாய் உரைக்கலுற்றான்
நல்லதென்று மாதியனும் நளினமுள்ள வீரையனைக்
கூட்டிவந்து மாதியனும் குணமாகத் தானுமங்கே 1250
ஆரடிபெண்ணே உன்மைந்தனுக்கு அன்னம்
படையுமென்றார்
அப்போது மாதாவும் அன்பான பாலனுக்கு
வாழைஇலை போட்டு வகையுடனே மாதாவும்
சம்பா வடித்ததொரு சாதம் பரிமாறி
உத்தமனார் வீரையர்க்கு உருக்கியே நெய்வார்த்து 1255

1. ஓலைப்பகுதி ஒடிந்துவிட்டது.

1 ———— இனிபாற்றமுடன்
———— சமுந்தான் படக்க
———— றும் விற்றிருந்தார்
———— ம் போய் மறைந்தான்
———— முள்ள விரையன்
———— ாத்தி விடைகொடுந்தான்

## விரையன் மறுநாள் பொம்மி குடிசில் புகல்

நடந்தானே அப்போது
மங்கைநல்லாள் குடிசில் வகையுடனே போய்நுழைந்தான்
அப்போது பொம்மியரும் அடைவாகத் தான்பார்த்து
ஆதிநா ராயணனும் ஆதிசிவன் தானறிந்து
மங்கிலியம் தான்குறிக்க மச்சினரே வாருமென்றார் 1260

வாரேனே யென்று சொல்லி மங்கையரைத் தான்தழுவிச்
சிரித்து விளையாடித் தேன்மொழியைத் தானழைத்து
மதுரைதுரை விரையன்மேல் மங்கைநல்லாள்
ஆசைகொண்டு
வாருங்காண் மச்சினரே வார்த்தை சொல்லக்கேளுநீர்
முப்பது நாளும் [2] முகிந்ததுகாண் நாளையென்றாள் 1265

நாளைக் குடிசில் நலமாக விட்டிறங்கி
என்தகப்பன் மாளிகைக்கு இனிஅழைத்துப் போவார்களே
உம்மைவிட்டு நான்பிரிய உத்தமனே கூடாது
இருவருங் கூடி இருந்து விளையாட
என்று விடியுமோ எத்தனைநாள் செல்லுமோதான் 1270

நாளைக்குத் தானும் நலமான சாயந்திரம்
சாயந்திர வேளையிலே சக்கிலியா வாருமென்றாள்
வாரேண்டி சக்கிலிச்சி மத்தியான வேளைதனில்
மாதிபனும் நானும் வருகிறோம் பெண்ணணங்கே
சாதம் படைக்கச் சதிராக வந்தாயென்றால் 1275

மங்கையரே உன்முகத்தை மதுரையும் பார்ப்பனடி
அப்போது பொம்மியரும் அடைவாக ஏதுசொல்வான்
நாளைப் பொழுதில் நலமாகப் பார்ப்பீர்காண்

---

1. ஓலைப்பகுதி ஒடிந்துவிட்டது.
2. முடிந்தது

அப்புறம் என்முகத்தை அடைவாகப் பார்ப்பீர்காண்
கூடுமோவென்று கொம்பனையார் தானும்
சொல்வாள் 1280
கோட்டைக் குறிக்காரன் கொத்தளத்துச் சேவுகரும்
தொட்டியக் காவல் துருசாகத் தானிருக்கும்
உத்தமனே உன்னை உள்ளே விடுவார்களோ
என்னையும் விட்டு இருப்பீரோ பூமியிலே
மன்னவனே உன்னை விட்டு மண்ணில் இருப்பேனே 1285
என்று சொல்லிப் பொம்மியரும் இதமாகத் தானழுக
கண்ணீர் துடைத்துக் காவலனு மேதுசொல்வான்
உன்னையுங் கொண்டு ஊருவழி போறனடி
இருவரும் போய்ப்பிழைப்போம் எண்ணாதே மங்கையரே
தேறுதலைச் சொல்லித் தென்னவனும்
தானடந்தான் 1290

## வீடு திரும்பிய வீரையன் புலம்பல்

என்ன செய் வோமென்று ஏங்கி முகம்வாடி
வீட்டுக்கு வந்து விதமாக வீரையனும்
பெத்த மனது நொந்து வீரையனும் தானுரைப்பான்

### கலித்துறை

கானக் குறவள்ளி தெய்வானை மாமிக் கயல்கண்ணியே
மானைப் பிரிந்த கலைபோல் என்னுவி மயங்குதையோ 1295
சேனைப் படைகளும் சேவுகர் காவல் சிறந்துநிற்பார்
நானெப் படிவரு வேனிந்த நற்பதிக்கே[1]
ஆட்டை எடுத்துத் திருவேலங் காட்டி லரனுடைய
கோட்டையைத் தாண்டிக் குதித்தாலுஞ் சேவுகர்
கொல்லுவரே
வீட்டில் தாய்தந்தை பிரிந்து வெளிப்பட வேதனை 1300
ஓட்டில் எழுதினையோ சிவனேஉன் மாயம் ஏறிடவே
முத்துப் பவளந் தரித்திடுநல் தேவியென் மொய்குழலி
எத்தனை காவல் இருப்பார்களோ[1] இதை நானறியேன்

1. இவ்வடி சீர் குறைந்துள்ளது

சுத்து மதில்களும் சூழ்ந்திடு ராட்சதர் தொட்டியர்கள்
1சந்து கயவூரள பாகுசாலி இந்தத் தரணியிலே 1305
காளிகங் காளியென் காமாட்சி தொட்டியர் காவலிலே
மாளிகை கெட்டி கண்டு தெரியவழி யறியேன்
நாழிகை தான்பதி னெட்டினில் பொம்மியை நானெடுக்கத்
தாளிவி பூதி தருவாய் மதுரைம காமுனியே

துலுக்கர் கருநாடகர் மராட்டியர் அம்புதொ
டுத்துநிற்பார் 1310
வலுக்கரும் மெத்தவந்து வளைத்துக் கணைதொடுத்திடுவார்
இமுக்குது காமன்க ணைவந்து தாவுதினித் தெய்வமே
முழுக்கப் படித்தென்ன பிரம்மா வெழுத்துக்கு
மோசமுண்டோ
பாளையத் தார்கள் பழிவாங்கும் சோபழி தொடர்ந்தால்
ஏழையென் செய்வேன் எனைப் படைத் திட்டநல்
ஈஸ்பரனே 1315
வாளைப்பி டித்த வட லாண்மை கண்டு வளைந்துகொண்டு
மூளையுஞ் சிந்தஅடிப்பார் களேஎங்கள் முத்தையனே
பெண்ணால் பழிவந்து மூண்டிடு மோஇந்தப் பேருலகில்
எண்ணாதுஎண்ணி இடிந்து கரைந்து இருப்பதுதான்
கண்ணாலே பார்க்கவே நீர்வரு வாயித்திறம் வேல்
முருகா 1320
மண்ணாகி நொந்துபு லம்புவ ளேஎந்தன் பொம்மியளும்
கொஞ்சுங் கிளிமொழி யன்னமே எந்தன் கோதையரே
நெஞ்சும் பதறி யுன்மீதி லாசை நினைவுள்வந்து
அஞ்சம்பு பாணமு டையான் எனையும்து ணித்திடுவான்
பஞ்சவர்ணக் கிளியே சொல்லுங்கள் எந்தன் பாவை
யர்க்கே 1325
தாரை மேளங்கள் வருந்தியழ பொம்மி தொட்டியரில்
வீரையன் போகவுங் கிட்டிலே யேயிந்த மேதினியில்
2சீரையுடக் கொண்டு செலுத்துவர் கற்பளம் சிறந்துநிற்க
ஆரையனுப்பா விட்டாலும் அங்கேர மதட்டுவரே
மந்தரஞ் சக்கரம் மஞ்சன வித்தைகள் வலுவுமுண்டு 1330

---

1, 2 — இவ்விரு பகுதிகளும் விளங்கவில்லை.

தந்திரமாகவே கோட்டையைத் தாண்டிக் குதித்துத்
தையலரை

எந்தவி தங்கண்டு நானெடுப் பேனிந்த மேதினியில்
அந்திப்பொழுது சாயங் கால ராத்திரி ஆகட்டுமே

நடை

## பொம்மணன் தன்மகளை வீட்டிற்கழைத்தல்

பொழுது விடிந்தது பொம்மண நாய்க்கனுந்தான்
கொம்புகளுடனே குடிசுக்கு வந்தார்கள் 1335

குடிசைப் பிடுங்கிக் கொள்ளியை வைத்தார்கள்
பொம்மியம் மாளுக்குப் பொங்கமுடன் நீராட்டி
நீராட்டி மயிர்கோதி நெத்திக்குப் பொட்டுமிட்டுக்
[1]கூறை யுடுத்திக் கொம்பனையாள் பொம்மியர்க்கு
வாகாகச் சவரிகட்டி வர்ணப் பிறையணிந்து 1340

கொப்பிட்டு வாளியிட்டுக் கொந்தளப்பொன் ஓலையிட்டுக்
கருங்குருவி வாலதுபோல் கண்ணுக்கு மையெழுதி
உட்கழுத்துக் காரை உசத்திபுள்ள கல்லிழைத்துக்
கட்டுவடம் பொன்னாலே கழுத்தில் சரமணிந்து
மார்பில் பதக்கமிட்டு வகையுடனே கைகளுக்கு 1345

முன்கை முதாரி முறுக்குவளை தானணிந்து
கடகஞ்சரி பவளம் கைவளைகள் தானணிந்து
பத்து விரலுக்கும் பசும்பொன் கணை யாழியிட்டு
இடுப்பிலே ஒட்டியாணம் இதவாகத் தானணிந்து
காலிலே மெட்டி கனத்ததொரு பாடகமும் 1350

சிலம்புதண்டை பாதசரம் சீராகத் தான்போட்டு
இத்தனை ஆபரணம் இயல்பாகத் தானணிந்து
முத்துவர்ணப் பட்டு [2]முகாரணம் தான் போட்டு
விலைமதிக்கப் போகாத மிதியடியும் கட்டியேதான்
கொண்டுவந்து போட்டானே குணமுள்ள மாதியன்
தான் 1355

1. புதுப்புடவை 2. ?

அப்போது பொம்மியிது ஆருடைய வேலையென்று
மதுரையுட வேலையென்று மனத்திலே தான்நினைந்து
மிதியடியும் போட்டு வேல்1பொருதுங் கண்ணும்
தம்பட்டை மேளம் தவில் முரசு தான்முழுங்கப்
புல்லாங் குழலூதப் பேரிகையுந் தானதிர 1360

நாதசுர மேளம் நாட்டியங்க ளாடிவர
மங்கையரும் பொம்மியம்மாள் வகையுடனே தானடக்க
தொட்டியப் படைகளெல்லாம் துருசாகப் பின்னடக்க
அதிர்வெடிச் சத்தமும் அனேகம் முழங்கிவர
வாராளாம் பொம்மியம்மாள் வர்ணமுள்ள
மாளிகைக்கு 1365
ஆலாத்தி சோடித்து ஐம்பதுபேர் தாதியர்கள்
முத்தால்ஆலாத்தி முன்பாகச் சுற்றினார்காண்
பவளத்தால் ஆலாத்தி பணிவுடனே சுற்றினர்காண்
பொம்மியம்மாள் கூடப் பெண்கள் அனேகமுமாய்ப்
பட்டுச் சுழட்டிப் பாங்காகத் தானெறிந்தார் 1370
கட்டியங்கள் கூறக் கவரிகுஞ்சம் வீசிவர
மங்கை நல்லாள்தானும் மாளிகையின் உட்புகுந்தாள்

## அழைப்புச் சடங்குகள் இயற்றல்

அந்தச் சணமே ஆனதொரு பொம்மணனும்
தையல் நல்லாள் பொம்மியரும் சாஸ்திரம் செய்வதற்காய்ச்
சந்தனக் கட்டை சதிராகக் கால்நாட்டிக் 1375

குங்கும மரத்தால் கொடியவளை தான்பூட்டி
வேங்கை மரத்தால் மேல்கொடுங்கை தான்சேர்த்து
மெல்லிநல்லாள் வீற்றிருக்கும் விடுதி யலங்கரித்து
மல்லிகைப்பூப் பிச்சிப்பூ மருக்கொழுந்து தொங்கலிட்டுத்
தூணுக்குத் தூணு துவண்டாடுஞ் சித்திரங்கள் 1380

குத்து விளக்கெரியக் கோதையர்கள் தான்பாட
அகலமுள்ள பந்தலிலே அசையா விளக்கெரியப்
பதினெட்டு வாத்தியங்கள் பாங்காகத் தான்முழுங்கப்
பட்டணங்க ளெல்லாம் பாங்காக ஓசையிடும்
ஊரிலுள்ள தொட்டியரும் உறவின் முறையாரும் 1385

1. ஒக்கும்.

பாளையத்தி லுள்ள பரிசனங்கள் எல்லாரும்
மாணிக்க நாற்காலி மணவறையில் தான்போட்டுப்
பொம்மியரைக் கொண்டுவந்து பொங்கமுடன்
தானிருத்திச்
சாஸ்திரங்க ளெல்லாம் சதிராகவே முடித்து
அன்னக் கிளியாளும் அரமனையி லுள்புகுந்தாள் 1390

## வந்தோர்க்கு விருந்திடல்

பரிசனங்க ளெல்லோர்க்கும் பாக்கிலையும் தான்
கொடுத்துச்
சந்தனங் கஸ்தூரி தான்திமிர்ந்தார் எல்லோர்க்கும்
கொடுத்த பிறகு கோதையர்கள் தான்கூடி
ஆயிரங் கலச்சம்பா அரிசிமிக வடித்துப்
பதின்கலத் துவரை பருப்புமிகச் சமைத்து 1395

வாழைக்காய் பொரியல் வழுதலங்காய்ப் பச்சடியும்
பரங்கிக்காய்ப் பச்சடியும் பாவக்காய்ப் புளிக்கறியும்
விருந்து சமைத்தார்கள் வீரமுள்ள தொட்டியர்கள்
மன்னன் துரைராசா வகையான சேனைகளும் 1400

ஊரிலுள்ள தொட்டியரும் உறவின் முறையாரும்
அழைத்துவந்து தண்ணீர் அடைவாகத் தான்கொடுத்து
அகலமுள்ள பந்தியிலே ஆயிரம்பேர் பந்திவைத்துப்
பந்திக்குத் தொட்டியர்கள் பரிமாறி ஓய்ந்தபின்பும்
உறமுறை யாரெல்லாம் உண்டுபசி யாறியபின் 1405

சாப்பிட் டிளைப்பாறிச் சனங்களெல்லாம் தானிருந்தார்
தொட்டியர்க ளப்போது துருசாகத் தானோடித்
1தாம்பூலம் சந்தனமும் தயவாகத் தானெடுத்துச்
சாப்பிட்ட சனங்களுக்குத் தயவாகத் தான்கொடுத்துப்
போமென் றனுப்பிவைத்தார் புகழ்பெரிய
பொம்மணனும் 1410

வந்த சனங்களெல்லாம் வகையாகத் தான்போக

---

1. வெற்றிலைபாக்கு

### வீரையனும் சின்னானும் உணவு பெற வீட்டிற்கு வரல்

மாதியச் சின்னானும் வண்ணத்துரை வீரையனும்
சாதங்கறி வாங்கவென்று தாம்வாரார் அப்போது
மாதியன் முன்போக மதுரையனும் பின்னடக்கப்
பானையுங் கொண்டு பரிவான சக்கிலியன் 1415

இருவ ரெண்டுபேரும் இதமாக வந்துநின்றார்
பொம்மண நாயக்கன் பொங்கமுடன் தான்பார்த்து
ஆரடிதாதி மாதியனுக்கு அன்னம் படையுமென்றார்
படையுமென்ற சத்தம் பைங்கிளியாள் தான்கேட்டு
ஆரென்று சொல்லி அலறி எழுந்திருந்தாள் 1420

சக்கிலிய னென்று தாதியரும் சொன்னார்கள்
சொன்ன வுடனே சுருக்காகப் பொம்மியரும்
சாதங்கறி வகையும் தட்டில் பரிமாறித்
தாதிகையில் கொடுத்துத் தையல் நல்லாள்
பின்தொடர்ந்தாள்

### காதலர் ஒருவரைஒருவர் காணல்

மாதியற்குத் தாதியரும் வாரியமு திட்டார்காண் 1425

வீரையன் தானும் விதமாகப் பொம்மியரும்
கண்ணாலவள் பார்த்துக் கலங்கினாள் அப்பொழுது
ஏறிட்டுப் பார்த்தான்காண் எண்ணமத்த காளையுந்தான்
கடைக்கண்ணால் தான்மிரட்டிக் கார்வண்ணன் சாடை
செய்தான்
மங்கையருங் கண்டு மாளிகையினுட் புகுந்தாள் 1430

அந்தச்சணமே அரண்மனையை விட்டு மெல்ல
இருங்காணும் பெண்ணே நீ எங்கே தப்பிப்போறாயென்று
மாதியனும் வீரையனும் வந்துவிட்டார் மாளிகைக்குச்
சாப்பிட் டிளைப்பாறிச் சாயமுத்து வீரையனும்
பாக்கிலைகள் தின்று பண்பாகவே இருந்தார் 1435

### பொம்மியைச் சிறையெடுக்க வீரையன் புறப்படல்

கன்னியரை வலதழிக்கக் காளைமுத்து வீரையனும்
ஏந்திழையைக் கொண்டுசெல்ல எண்ணி
நினைத்தான்காண்

நினைத்து மங்கே விரையனும் நிமிஷத்தெழுந்திருந்து
மைந்தனென்று தான்வளர்த்த மாதியற்குச் சொல்லாமல்
பிள்ளையென்று தான்வளர்த்த பேதைபட்டும்
சொல்லாமல் 1440

பாதி இராத்திரியில் பதினெட்டு நாழிகையில்
சர்வாபரண மெல்லாம் தானெடுத்துத் தான்பூட்டிப்
பட்டாணி ராவுத்தனைப்போல் பாங்குடனே பாகுகட்டி
மாதளம்பூச் சல்லடமும் வகையுடனே தான்போட்டு
கச்சை இறுக்கிக்கட்டி கருங்கச்சை சுங்குவிட்டு 1445

இடதுபுறஞ் சுங்குலேதான் ஏமனுட அட்சரமும்
வலதுபுறஞ் சுங்கிலேதான் வடமலையான் அட்சரமும்
இடையில் சமுதாடு எறியம்பு கட்டாரி
பீரங்கத்தி பெரியகத்தி தோள் போட்டு
மாடறுக்குஞ் சூரி வலதுபுறந்தான் தான்சொருகி 1450

கன்றறுக்குஞ் சூரி கையிலே தான்பிடித்து
வாளுந் தடியும் வளைதடியும் சக்கரமும்
அம்புறுத் தூணி அடைவாகத் தான்சேர்த்துக்
காலிலே வில்லை கனத்த மிதியடியும்
சுண்டு வில்லும் அம்பும் துருசாகத் தானெடுத்துப் 1455

பொம்மியின் மேல் ஆசைகொண்டு புறப்பட்டான்
தென்மதுரை
மாளிகையை விட்டு வாரானே தென்மதுரை
கொள்ளை கொண்டு வீரையனும் கோட்டையருகில் வந்து

## வீரையன் காளியை வணங்கல்

மாகாளி அம்மனையும் மனதிலே தானினைத்தான்
அப்போது மாகாளி அன்பாகத் தானும் வந்தாள் 1460

வந்து தயவாக மகனை மிகப் பார்த்து
ஏண்டா மகனே என்னை நினைத்ததென்ன
என்று சொல்லி மாகாளி இதமாகத் தான்கேட்க
அப்போது தென்மதுரை ஆணிமுத்து வீரையனும்
பொம்மியரைத் தானெடுத்துப் போகவந்த
தருவாயில் 1465

ஃ ஃ ஃ

## பொம்மி புலம்பல்

[1]பூவோ பொம்மியே யென்று மறந்து போனாரோ
தாவியணைத்து மையல் தந்திட
காமன் பானம் சோர்ந்து சோர்ந்து
சோக மாகுதே — சாதம்
படைக்கப் போன போதுதான்
கண்ணாலே மிரட்டி சாடை
சொல்லிப் போனாரே சூது மாதுண்டோ 1470
மனதிலே இந்த நேரம் சுக்கான வெள்ளி விடியப்
போகுதே
...........தலைபாரி கண்டுபிடிச்சாரோ நடுவழி
வாளால்
வெட்டி மடிந்து போனாரோ தோசம் வருமோ
ராசா குலத்துக்கு ஆனபழி தொடர்ந்து
குலத்தைச் சுற்றுமே.
என்ன எண்ணி மனது கலங்குதே சாமிநீர்தான் 1475
எப்போ வருவா ரென்று வாடுகிறேன்
பெண்ணாள் பிழைகள் செய்திருந்தாலும்
இந்த வேளையில் பிரியமாய் என்னை அணைய
வாருமையா

நடை

## புலம்பல் கேட்ட வீரையன் வீட்டினுட்புகல்

இந்தப்படி பொம்மி ஏங்கிப் புலம்பினதும்
(அழகனா)ர் வீரையர்க்கு அருஞ்செவியில்
கேட்டுதிப்போ 1480
(கேட்ட) வுடனே (கீர்த்தி)யுள்ள தென் மதுரை
(ஆரோ) புலம்புகிறாள் அருங்கிளியாள் பொம்மியரோ
என்றுதான் வீரையனும் இயல்புடனே பார்ப்பளவில்
தொட்டியப் பொம்மணனும் துருசாகப் பார்த்திருக்க
உள்ளறையில் பொம்மியம்மாள் உறங்குறதைத்
தான்பார்த்து 1485

1. வரியின் பொருள் விளங்கவில்லை.

இத்தனை கட்டு மட்டா இருந்துநம்மை என்னசெய்வான்
என்று சொல்லி அப்போது எண்ணமற்ற காளையுந்தான்
மந்திரத்தை உச்சரித்து மதுரை மகாமுனியும்
அஞ்செழுத்தை நெஞ்சில்வைத்து அரனடியைத்
தான் போற்றி
என்ன உருவெடுத்தான் எண்ணமற்ற வீரையனும் 1490
ஈயென் றொரு வேசம் எடுத்தானே தென்மதுரை
கதவிடுக்கால் நுழைந்து கன்னியருகில் வந்து
தட்டி யெழுப்பினர் காண் தார்குழலை அப்போது

## பொம்மி திடுக்கிட்டெழுதல்

தேன்மொழியாள் பொம்மி திடுக்கென் றெழுந்திருந்து
போதும் போம் ராசாவே பொய்வார்த்தை
சொன்னீரே 1495
மெத்தையிலே தான்படுத்தேன் விடியமட்டும்
தூக்கமில்லை
வருவீர் வருவீரென்று வழிபார்த்துக் கொண்டிருந்தேன்
எப்போ வருவீரோ என்றிருந்தேன் ராசாவே
(வாரு மி)ரு மென்று மயிலனையாள் பொம்மியரும்
கட்டி யணைத்துக் கனிவாயை முத்தமிட்டாள் 1500
இருபேரும் சேர்ந்து இருந்தார்கள் பஞ்சணையில்
பொம்மியம்மாள் வீரனைத் தான் பொறுமையுடன்
தான் பார்த்துக்
கோட்டைத் தலைவாசல் கொத்தளமும் நீதாண்டி
இந்தநல்ல வேளையிலே எப்படிநீர் வந்தீர்காண்
என்று சொல்லிப் பொம்மியரும் இன்பமாய்த்
தான் கேட்க 1505
அப்போது வீரையனும் அடைவா யுரைக்கலுற்றான்
வாராய் நீ பெண்ணே நான் வந்தவகை சொல்லுகிறேன்
(ஈயென்)று வேசம் எடுத்து வந்தேன் பெண்ணரசே
என்று சொல்லி வீரனுமே இன்பமாய்த் தானிருக்கப்
பொம்மியம்மாள் தானும் பொறுமையுடன்
சொல்லுகிறாள் 1510
இனிமேல் நடக்கும் வகை என்னவென்று கேட்டாளே

தெற்கே ஒருதேசம் திருச்சிணுப்பள்ளி யென்று
இருக்குதடி பெண்ணணங்கே இருபேரும் போவமடி
ஆனதொரு பிழைப்பு அமருமடி கன்னியரே
கர்த்தரைக் கண்டு கண்விருது தான்வாங்கி 1515

ஆயிரம்பொன் சேவுகம் அடைவாக வாங்குகிறேன்
இருபது நாழிகையும் ஆச்சுதடி ஏந்திழையே
பொழுது விடிந்தால் பெருமோசம் வந்துவிடும்
இனிமேலே இங்கிருந்தால் இளப்பம்வரும்
என்றுசொன்ஞர்

## வீரையனும் பொம்மியும் வீட்டைவிட்டு நீங்கல்

நல்லதுதான் என்றுசொல்லி நளினமுள்ள
நங்கையரும் 1520

மாணிக்கப் பேழைதனை வகையாகத் தான்திறந்து
செவ்வுக்கு ஆயிரம்பொன் சீக்கிரமாய்த் தானெடுத்துப்
பட்டுப் பட்டாவளியும் பாங்குடனே தானெடுத்து
(ஆபர)ண மெல்லாம் அடைவாகத் தானெடுத்து
மாளிகையை விட்டு வாசல்தனில் வந்துநின்று 1525

(———)டாங்காக் காளை மதுராபுரித் துரையும்
பொம்மணன் ஏறும் புரவிதனை அவிழ்த்து
தங்கக் கடிவாளம் தயவாகத் தான்பூட்டி
மாணிக்க முகவெட்டு வகையாகத் தான்பூட்டிக்
கழுத்துக்குப் பொன்சதங்கை கனமாகத் தான்பூட்டி 1530

அங்குவடி பொன்னுலே அச்சுநடைப் புரவிக்குத்
தங்கத்தால் கல்வளையும் தான்போட்டு வீரையனும்
பட்டத்துக் கத்தியைப் பாங்காகத் தானெடுத்து
நேரும் புரவியின்மேல் பொம்மியரைத் தூக்கிவைத்து
அதன்மேல் கால்போட்டு ஆண்டவனும் தானேறி 1535

(கடிவாளங்) கைப்பிடித்துக் காலாலே தட்டலுற்ருன்
அப்போது குதிரை அதிவேகமாய் நடக்க
கோட்டை கடந்துதான் கொள்ளைகொண்ட வீரையனும்
பொம்மியரை முன்னே வைத்துப் போட்டான்
குதிரைதனை

தெற்குமுகம் புரவியைத்தான் திருப்பினர்கா
ணப்போது 1540
கோட்டானும் கூட்டமிட்டுக் கூடவே அந்நேரம்
பொம்மி யம்மாள் பார்த்துப் போக மனஞ்சலித்து இது
பொல்லாச் சகுனமென்ருள்பொம்மியம்மாள் அப்போது
நாடு விட்டுத் தானும் நடத்தும் புரவி யென்ருள்
அந்த மொழி கேட்டு ஆணிமுத்து தென்மதுரை 1545
நன்ருச்சு நன்ருச்சு நன்ருகவே உரைத்தாய்
தேன் மொழியாள் மீனுட்சி திருவுளமே உள்ள மட்டும்
வான துர்க்கை யம்மன் மலர்ப்பதமே உள்ள மட்டும்
அவகேடு வாரதில்லை அஞ்சாதே யென்று சொல்லி
நடந்தார்கள் தெற்கு முகம் நாழிகைக்குக் காதவழி 1550
செஞ்சிப் பட்டணத்துத் தெருவோடே வருகையிலே
வஞ்சி யம்மா வாசல் வாழு முனிகளெல்லாம்

## செல்லும் வீரையனை வஞ்சியம்மன் முனிகள் தடுத்தல்

பட்டணங்கள் சுற்றிப் பதிவாய் வருகையிலே
ஒற்றைக் குதிரையு மாய் ஒருவன் வருகிறதைக்
[1]கண்டு மேயந்தக் கனமுனிகள் அத்தனையும் 1555
பாதி பதினைந்து பதினெட்டு நாழிகையில்
காளி குடியிருக்கும் கானக இடங்களிலே
ஆரடா நீதான் அஞ்சாமல் வந்தவன்தான்
என்று சொல்லி முனிகள் எதிர்த்து வந்து தான்மறிக்க
அப்போது வீரையன் அடவாகச் சொல்லுகிருன் 1560
தெற்கே நான்போக ஒரு சேதியுண்டு என்று சொன்னுன்
வார்த்தைதனைக் கேளாமல் வாள் முனிகள் அத்தனையும்
அவ்விடத்து உத்தரவு அல்லாமல் உன்னையும்தான்
(விடுவ)தில்லையென்று வீரமுடன் தான்மறிக்க
(எண்ண)வே வீரையனும் ஈஸ்பரனைத் தானினைந்து 1565
அன்று கொடுத்தவரம் அருளுமென்ரு னிப்போது
அப்போது வெள்ளிமலை ஆண்டியெனும் ஈஸ்பரனுர்
தப்பாமல் கேட்டவரம் தானே கொடுத்தாரம்

---

1. கண்டு மந்தன் — என ஓலையில் உள்ளது.

## காளி அருளால் வீரையன் முனிகளை விரட்டல்

மனத்தில் நினைத்தவுடன் மந்திரங்கள் வந்ததப்போ
மந்திரத்தினாலே வந்தெதிர்த்த வாள்முனியை 1570

ஆக்கிரமுடன் கொக்கரித்து அதட்டியே வீசலுந்தான்
அப்போது வாள்முனிகள் அனேகங்கள் செத்திடவே
தப்பி அங்கேஓடி சடாமுனிகள் அத்தனையும்
காளி அபயம் காளி அபயமம்மா
வஞ்சியம்மன் வாசல் வந்து விழுந்ததுவே 1575

காளி வெகுண்டு கடுங்கோப முண்டாகி
என்னடா வாள்முனியே எனக்கபய மிட்டதென்ன
வஞ்சியம்மன் கேட்க வாள்முனிகள் ஏதுசொல்லும்
தாயே தயாபரியே சங்கரியே ஈஸ்பரியே
பட்டணங்கள் சுற்றிப் பதிவாய் வருகையிலே 1580

மானிட சென்மமோதான் மனித னொருவனுந்தான்
(வந்)தான் தெருவழியாய் வாய்மதங்கள் தான்பேசி
வழிமறித்த போதே வந்துபல் கடித்தான்
வெட்டித் துரத்தி வீரமுடன் தான்போரான்
என்று முனியுரைக்க ஏந்திழையாள் மாகாளி 1585

கோபம்வந்து கண்சிவந்து கோலமும் வேறாகி
வீரமுடனே தான் வெளியிலே வந்துநின்று
ஒத்தைச் சடாமுனியும் ஒண்டிக் கருப்பனையும்
சுத்துலே தானிருக்கும் துடியான பூதங்களை
விலங்கிலே போட்டிருக்கும் வீரமுனி தான்கோடி 1590

(மொண்டி)ப்பேய் தான்கோடி மூக்கறைப்பேய் தான்கோடி
சண்டிப்பேய் தான்கோடி சடாமுனிகள் தான்கோடி
(இன்ன) சேனைகளை இன்பமாய் மாகாளி
அருகே வரவழைத்து ஆரோஎன ஒருவனுந்தான்
அடித்துத் துரத்திவிட்டு ஆண்மையுடன் போறானும் 1595

அபயம் அபயமென்று அழுகிறது வாள் முனிகள்
அந்தப் [1]பழக்காவனை அவசரத்தில் கொல்லுமென்றாள்
மாகாளி சொல்ல வாள்முனிகள் அத்தனையும்
மந்திர வாள் தானுருவி மார்தட்டித் தான்நடந்தார்

1. — ?

வாளுருவி வந்த மகாகோடி சேனைகளைக் 1600
கடைக்கண்ணால் தான்மிரட்டிக் கட்டழகன் வீரையனும்
நீளச் சடையானை நெஞ்சிலே தான் நினைந்து
கூட்டமுடன் வந்தெதிர்த்த கோடி பெரும் பகையைத்
திக்குத் திசையோடி சிதறவே தானடித்தான்
போன படையும் பூதபெரும் படையும் 1605
நான் செயிக்க வேணுமென்று நல்லவரங் கேட்டானே
அப்போது வெள்ளிமலை ஆண்டியெனும் ஈஸ்பரனார்
தப்பாமல் கேட்டவரம் தான் கொடுத்தா ரப்போது
நினைத்த வரங்களெல்லாம் நிமலனார் தான்கொடுத்தார்
மனத்தால் நினைத்தவுடன் மந்திரங்கள் வந்தது காக்க 1610
வந்த பெரும் படையின் வல்லாண்மையை முடிக்க
ஓடியே போக ஒருநொடியில் தான்நடந்தான்
போன பெரும் படையும் மிச்சமென வேஓடித்
துர்க்கை மாகாளி துணையடியிலே விழுந்து
பத்திர காளி பரஞ்சோதி காளியம்மா 1615
சத்தான சூலி சொல்லவே கேட்டருள்வாய்
வீரமும் சேவகமும் மெத்த மிடுக்குடையான்
மானிடச் சென்ம மென்று மதிக்கவே கூடாது
நீ தான் அவனை நேசமுடன் அழைத்து
மாதாவே இப்போது மகிழ்ந்து வரங்கொடுப்பாய் 1620
என்றுமுனி பேய்கள்சொல்ல எண்ணமற்ற காளியுமே
தன்னுடைய கோபம் தணிந்து பிரியமதாய்க்
கையில் பிடித்த கபாலமும் சூலமுடன்
விரித்த திருச்சடையும் வெண் புலித்தோல் ஆசனமும்
பூசிய வெண்ணீறும் புலித்தோ லுடையழகும் 1625
துர்க்கையம்மன் காளியம்மன் தோன்றினள்காண்
அப்போது
கண்டானே வீரையனும் கண்கள் களிகூர
மாகாளி தன்னை மனமகிழ்ந்து தெண்டனிட்டு
தோத்திரங்கள் சொன்னான் துரிசாக வீரையனும்

## வீரையன் காளியை வணங்கல்

### விருத்தம்

உத்தமி தாயே போற்றி
உமையவள் காளி போற்றி 1630
அத்தனு ருடனே மன்றில்
ஆடிய தேவி போற்றி
வித்தகி விமலி போற்றி
வீரசெஞ் சடையார் போற்றிப்
பத்திர காளி போற்றிப்
பகவதி போற்றி போற்றி

### நடை

ஆயனுடன் பிறந்த அந்தரியே சுந்தரியே
மந்திரத்தால் மிகுந்த மகமாயி சுந்தரியே 1635
மாகாளி யேழுலக மாடியருள் மாதாவே
தாரகா சூரனுடல் தான்பிளந்த சங்கரியே
அடியார் வினைதீரும் ஆனந்த நாயகியே
என்னைப் பயின்றெடுத்த என்றாயே ஈஸ்பரியே
ஆருக்கு மஞ்சாமல் அடியேனுன் செய்தகுற்றம் 1640
பொறுத்தருள வேணுமென்று புகழ்ந்தானே வீரையனும்

### விருத்தம்

பூவினில் மாதே உந்தன்
பொன்னடி காண வேண்டி
மேவியே இங்கு வந்தேன்
வேறெனக் குதவி யில்லை
காவியங் கண்ணி னாளே
கரத்திலே கபால மேந்துங்
தேவியே உந்தன் சித்தம்
திருவுளம் அருள்செய் வாயே 1645

நடை

தோத்திரம் செய்துரைக்கத் துய்யமா காளியுந்தான்
பத்திர காளி பரஞ்சோதி கேட்டருள்வாய்
சத்தான சூலி சொல்லவே கேட்டருள்வாய்
சந்திரனே சூரியனே சாதி பகவானே
இந்திரனே நான்முகனே ஏறுமயில் வாகனனே 1650
வீரமும் பாடுமெத்த மிடுக்குடையான் இவனைப்போல்
[1]பூமியிலே அறியவுந்தான் கூடாது
(நாத)னவனை இப்போ நேசமுடன் அழைத்து
மாதாவே நீயும் மகிழ்ந்து வரங்கொடுப்பாய்
என்று முனிகள் சொல்ல இன்பமாய்க் காளியுந்தான் 1655
தன்னுடைய கோபமதைத் தானடக்கி அப்போது
கையில் பிடித்த கபாலதிரி சூலமுடன்
பூசிய வெண்ணீறு புலித்தோ லுடையழகும்
ஓசை யுடனே ஒரு கையில் மழுவேந்தித்
துங்கமா காளியும் தோன்றிமறைந் தாளப்போது 1660
கண்டானே வீரையனும் கண்கள் களிகூர
(ஆசை)யது இல்லாமல் அடியேனன் செய்தகுற்றம்
(பொறுத்த)ருள வேணுமம்மா பூலோக நாயகியே-
என்று பணிந்து இன்பமாய் வீரையனும்
இருந்த தறுவாயில் ஏற்றமுள்ள மாகாளி 1665
சித்த மிரங்கிச் சிறுவனையும் தான்பார்த்து
உன்பேருடனே ஊரும் பிறந்து வளர்ந்ததுவும்
ஆருமக னென்று அறிய உரையுமென்றாள்

## காளியிடம் வீரையன் தன் வரலாறு கூறல்

மாகாளி கேட்க மகராசன் வீரையனும்
நான்பிறந்த சேதி நலமாகக் கேட்டருளீர் 1670
இப்பிறப்பும் முற்பிறப்பும் எந்தனுக்குத் தெரியாது
காட்டில் கிடந்து கதறிநான் அழுதசத்தம்
கேட்டு மந்த சக்கிலிச்சி கிருபையுடன் எனைஎடுத்து
வளர்த்தா ளிதுவரைக்கும் வகையாக எந்தனையும்
ஆகையினா லேஇப்போ அடியேனுக்கு மாதாவே 1675

1. வரி குறைந்துள்ளது.

முற்பிறப்பும் இப்பிறப்பும் முதலாகச் சொல்லவேணும்
என்று சொல்லி வீரையனும் இன்பமாய்த் தான்கேட்க
அப்போது மாகாளி அம்மாளும் ஏது சொல்வாள்
வெள்ளி மலைதன்னில் வீரமுடன் வீற்றிருக்கும்
ஆதி சிவன் வேர்வையில் அன்பாக நீபிறந்தாய் 1680

வேர்வையில் பிறந்து வீற்றிருக்கும் நாளையிலே
நாராயண ராசன் நலத்தவசு பண்ணுவதை
ஆதி சிவனார் அறிக்கையது தானாகி
உன்னை வரவழைத்து உபாயமாய்த் தானுமிங்கே
மானிட சென்மமதாய் மாநிலத்தி லேபிறந்து 1685

நாரா யணராசன் நலத்தவசில் தான்பிறந்து
ராசன் குலத்தில் நேசமுட னேவளர்ந்து
கம்பளத்துப் பெண்ணைக் கனமாய்ச் சிறையெடுத்துப்
பதினாறு வயது பாங்குடனே சென்ற பின்பு
திருச்சினாப் பள்ளிக்குத் தீர்க்கமுடன் தான்சேர்ந்து 1690

விசயரெங்க சொக்கலிங்கம் வேந்தன் துரைராசன்
கர்த்தரைக் கண்டு கனவிருது தான் வாங்கித்
தென்மதுரை நோக்கித் திறமாகச் சேர்ந்த பின்பு
மீனாட்சி அம்மனுக்கு மிகுந்தபணி விடைகள் செயும்
வெள்ளையம் மாள் தன்னை விதமாய்ச்
சிறையெடுத்துச் 1695

சேவகருங் கண்டு திறமாக அப்போது
கண்டு பிடித்துக் காலும் கையும் தான்வாங்கி
உன்னுயிரை விடுவாய் உத்தமனே அப்போது
வாக்கு வரங்கொடுப்பாள் வல்லவளும் மீனாட்சி
மும்மூர்த்திகள் தனக்கு முன்னோடும் சேவகனாய் 1700

நன்மூர்த்த மாக நாடெங்கும் பூசைகொள்வாய்
அங்காளி கோயிலுக்கு அதிபதி யாயிருப்பாய்

## விருத்தம்

உந்தனைப் போலே வல்லார்
ஒருவரு மில்லை யென்று
சிந்தையில் துணிந்து சென்று
திசையெல்லாம் வெல்வாய் நீயும்

மைந்தனே உனக்கு வேண்டும்
வரமது கேட்பாய் என்று 1705
கந்தனைப் பயந்த வீர
காளியுந் தானுஞ் சொன்னாள்

நடை

மாகாளி சொல்ல மைந்தனுந்தான் வீரையனும்
மெத்த வணக்கமுடன் வேந்தனுந் தானுரைப்பான்
சொல்லவே கேட்டருளீர் தோகை உமையவளே
எந்தச் சொரூபம்நான் எடுக்க நினைத்தாலும் 1710
அந்தரூ பத்தை அடைவாக நீர் கொடுத்துக்
கையிலே வைத்திருக்கும் கனத்த அரிவாளை
எந்தனுக்குக் கொடுக்க வேணுமென்றான் ஈஸ்பரியை
நானினைத்த விடந்தனிலே நன்றாக நீயும்வந்து
எனக்குத் துணையாக எந்தாயே வந்தருள்வாய் 1715
என்று சொல்லி வீரையனும் இன்பமாய்க் கைகுவித்துச்
சேவித்து நிற்கையிலே தேன்மொழியாள் மாகாளி
கையரிவாள் தான்கொடுத்துக் கனத்ததொரு மந்திரமும்
மாறுரூபம் தானெடுக்க மகிமையுள்ள மந்திரமும்
காதிலுப தேசங்கள் கனமாகத் தானுரைத்துத் 1720
தெற்கே மறவாதே தேசத்தார் பொல்லாதார்
மறவருக்கு நீயும் மார்பாணி யாயிருப்பாய்
நீதானும் என்னை நினைத்த விடந்தனிலே
வாகாக உந்தனுக்கு வந்துதவி செய்கிறேன்நான்
என்று மாகாளி இன்பமாய் வரங்கொடுத்துப் 1725
போமென் றனுப்பிவைத்தாள் புகழ்பெரிய காளியுந்தான்

விருத்தம்

அஷ்ட கபாலி போற்றி
துரைராசன் மகளே போற்றி
வஸ்துவை நினைத்த போது
வடிவுள்ள மங்கை போற்றி
பஸ்பமாய் எனக்குத் தந்து
பார்தனில் நினைத்த போது
அக்ஷணம் வந்து உதவும்
ஆயியே போற்றி போற்றி 1730

## நடை

ஆனமா காளிகையில் அதிக வரம்வாங்கி
வந்த படிக்கு அவன்நடக்கும் வேளையிலே
பொழுது விடிந்தது பொற்கோழி கூப்பிட்டது
பொம்மண்ண நாயக்கன் பொங்கமுடன் தானெழுந்து
பொம்மி யம்மாளென்று பெருக்கமாய்க்
கூப்பிட்டான் 1735
கூப்பிட்டுப் பார்த்துக் குணமுள்ள தொட்டியனும்
பஞ்சகல் யாணியையும் பட்டத்துக் கத்தியுந்தான்
பொம்மி யம்மாளைப் பார்த்துப் பொருதாமல்
பொம்மணனும்
காணே மென்று சொல்லிக் கதறினன் பொம்மண்ணனும்
காண வில்லையென்று பேருன பொற்கதவை 1740
பொற்கதவைப் பேர்த்துப் புலம்பி வெளியில் வந்து
வாசலெங்கும் பார்த்தான் வர்ணக் கிளியாளைப்
பார்த்து மகளைப் பதறி விழுந்தழுதான்
பட்டணத்தி லுள்ள பரிசனங்கள் எல்லோரும்
திக்குத் திசை களெல்லாம் தேடித் திரிகையிலே 1745
மாதியச் சின்னனும் மகளையும் காணமென்று
எதிராகத் தேடி வந்தான் எண்ணமற்ற சக்கிலியன்
எல்லோரும் பார்த்து எடுத்துரைத்தா ரப்போது
மாதியன் மகனும் மங்கையரைக் கொண்டு சென்ருன்
என்று சொல்லிச் சனங்கள் எல்லோரும்
எடுத்துரைக்க 1750
மந்திரியைத் தானழைத்து வகையுடனே பொம்மணனும்

## விருத்தம்

இப்படி அரசன் தானும்
இயல்புடன் பொம்மி தானும்
ஒப்புடன் தேடி (எங்கும்)
ஒருவிடம் காணே மென்று
செப்பமா வூரி லுள்ளோர் 1755

ஃ ஃ ஃ

# பின்னிணைப்பு - 1

கி. பி. 1896-ஆம் ஆண்டில் சென்னை அருணாசல முதலியாரால் வெளியிடப்பெற்ற 'மதுரைவீரசுவாமி கதை' என்னும் நூலின் இறுதியில் அமைந்துள்ள குறிப்பு :-

கடவுள் துணை

## மதுரைவீரசுவாமி கதை

### சரித்திர அலங்காரம்

இம் மதுரைவீரன் அம்மானையைப் படித்தவர்களுங் கேட்டவர்களும் சுக்கிரவாரந்தோறும் பூசைசெய்பவர்களுக்கு கல்யாணங் கூடிவரும். உத்தியோகம் வரும். வியாதியால் மெலிகின்றவர்களுக்கு வியாதி நீங்கி விடும். மனோகவலை நீங்கிவிடும். சகல பாக்கியமும் சந்தான சம்பத்தும் அஷ்டயீஸ்வரியமும் தன கனக வஸ்துவும், தீர்க்காயுசும், புத்திரசம்பத்தும் மாடுகள் கன்றுகள் தழைத்துப் பயிர்களெல்லாம் நீட்சியை யோங்கி எப்பொழுதும் மறுவில்லாப் பெருமையுண்டாகும். இந்தப் படிக்கி காசிகாண்டத்தில் வியாசரால் சொல்லிய கவிகளிலிருந்ததை இக்கதைக்காக மொழி பெயர்த்தருளியது. சுபம். சுபம்.



இக்கதையினைப் படித்தவர், கேட்டவர், வீரனைப் பூசை செய்தவர்கள் அடையும்பயன் இதில் கூறப்பட்டுள்ளது. இறுதியில் வடமொழிக் காசிகாண்டத்தில் வியாசர் சொல்லிய கவிகளில் இருப்பதனை மொழிபெயர்த்தமைத்தது என்று குறிப்பிட்டிருப்பது சிந்திக்கத்தக்கது.

தமிழில் தோன்றிய நாட்டுப்பாடலாக-தமிழ்மூலப்பாடலாகச் சில நூற்றுண்டிற்கு முன்னர் வாழ்ந்து மாண்டவரைத் தெய்வமாகப் போற்றிப் பாடிய செய்தியை, பழங்கால வியாசர் கூற்றின் மொழி பெயர்ப்பாகச் சொல்வது, தமிழ் மூலநூல்களுக்கும், நிகழ்ச்சிகளுக்கும் வடமொழி மூலாதாரம் காட்டிப் பெருமைகொண்ட பிற்காலப் போக்கினைக் காட்டுகின்றது. பிற்காலத்தில் தமிழ் இலக்கிய உலகில் வடமொழி பெற்றிருந்த செல்வாக்கினை உணர இக்குறிப்பு உதவியாக உள்ளது.



# பின்னிணைப்பு – II

கதை பொதிந்த நெடிய நாட்டுப்பாடல்களின் இறுதியில் வாழ்த்துக்கூறும் பகுதி அமைந்திருக்கக் காணலாம். பாடற் பயிற்சியின் பயன் அதன்கண் இடம்பெறும். இத்தகைய வாழ்த்துரை கட்கெல்லாம், 'மல்லன் மாஞாலத்து வாழ்வீர் ஈங்கென்' எனத் தம் காப்பியத்தின் ஈற்றில் வாழ்த்துரைத்த இளங்கோவடிகளை முன்ன வராகக் கருதலாம். 1896ஆம் ஆண்டில் வெளிவந்த மதுரைவீர சுவாமி கதைப்பதிப்பில், பாடலைப் படித்தோர் கேட்டோர்க்கேயன்றி நூலை வெளியிட்டோர் அச்சிட்டோர் ஆகியோர்க்கும் கூட வாழ்த்து உரைக்கப்பட்டுள்ளது.

நாட்டுப்பாடல்கள் காலந்தோறும், பல வகையிலும் நீட்சி பெறுதல் கூடும் என்பதற்கு எடுத்துக்காட்டாகத் திகழும் அவ் வாழ்த்துப்பகுதி வருமாறு :—

''பாடினோர் வாழி படித்தோரும் தான்வாழி
கேட்டோர் கிளை தழைத்துக் கீர்த்தி யுடனேவாழி
மாடுகன்று மக்கள் மருமக்கள் தான்வாழி
வீரனைப் பூசிக்கும் வேல்வீரர் தான்வாழி
அம்பாளச் சேந்திரமெனு மச்சுக் கூடந்தான்வாழி
மன்னர் கிருஷ்ணசாமி முதலியார் மகிழ்ச்சியுடனேவாழி
அவரச்சுக் கூடத்திலுள்ளோர் அனைவர்களுந்தான்வாழி
நாவலர்கள் வாழி நல்லோர் மிகவாழி
பூதலத்திலுள்ள புண்ணியர்கள் தான்வாழி
வாழி வாழி யென்று சொல்லி வரமளித்தார் ஈச்சுரனார்''.

அம்பாள் அச்சுயந்திரசாலை முதலியனவும் வாழ்கவென்று ஈசுபரனார் கூறி வரமளித்ததாகச் சொல்லியிருப்பது வேடிக்கையாகத் தோன்றி னாலும், அதனுல், காலப்போக்கில் பலர் கைவண்ணக் காணிக்கைக் கும் நாட்டுப்பாடல் இடம் தந்து நிற்கும் தன்மையினை உணரலாம்.



# பின்னிணைப்பு - III

நாட்டுப்பாடல்கள் பொதுமக்கள் பாடலாக அமைவதால் கொச்சை மொழிகளும் வட்டாரச் சொற்களும் அவற்றில் இடம் பெறுவது இயல்பாகும். இந்நூலில் இடம் பெற்ற அத்தகைய சொற்களிற் சில வருமாறு.

| சொல் | | ஏட்டிலுள்ள வடிவம் |
|---|---|---|
| புஷ்பம் | — | பொற்பம் |
| ஆலத்தி | — | ஆலாற்றி |
| அரண்மனை | — | அரமணை, அரமனை |
| வம்சம் | — | வங்கிஷம் |
| விரைவு | — | விரசு |
| புறப்படுகையில் | — | புறப்படையில் |
| சொல்லுகையில் | — | சொல்லையிலே |
| யார் பெற்ற | — | ஆரு பெற்ற |
| மறுகி | — | மருவி |
| சொல்வதுவும் | — | சொல்லறதும் |
| அப்போது | — | அப்போ |
| ஏற்றம் | — | ஏத்தம் |
| தான் அழ | — | தான் அழுக |

**வட்டார வழக்கு**

**பலுக்குவாள்**

**ஊறக்கட்ட**

**புத்திஅறிந்தாள்**

**உருமாலே.**



# பின்னிணைப்பு - IV

இந்நூலது ஏட்டுச்சுவடியின் தன்மை பற்றிச் சரசுவதிமகால் நூலகக்குறிப்பு :-

Name : வீரையன் அம்மானை.

M. No. : 997.

Copied Vol. No. : 2314.

Substance : Palm leaf. Size 39.5×3 c. m.

Leaves : 66

Lines : 7 — 8 to a page.

Script : Tamil. No. of Granthas 2000.

Author : அறிய இயலவில்லை. incomplete.

Beginning : காப்பு.

பார்புகழும் வீரையன் மேல் பண்புடனே அம்மானை

........ நூல்

கணபதியே நமவென்றால் கலங்குமே வல்வினைகள்

........

End : ........

நான் பிறந்த சேதியெல்லாம் நலமாகக் கேட்டருளீர்

Colophon: இல்லை

Subject : அம்மானை (96 வகைப் பிரபந்தங்களுள் ஒன்று)

Remarks : ஏடுகள் சற்றுச் சிதிலமாக உள்ளன.

ஓரங்கள் மிகவும் சிதைந்துள்ளன.

ஏடுகளிற் சில மாறுபடக் கோக்கப்பட்டுள்ளன.



# பின்னிணைப்பு - V

சென்னை அரசாங்கக் கையெழுத்து நூலகம் வெளியிட்டுள்ள நூற் பட்டியலில் வீரையன் அம்மானை பற்றிய குறிப்பு :

---

## A Triennial Catalogue of Manuscripts

**1919 – 20 to 1921 – 22.**

Vol. IV Part 2 Tamil.

---

R. No. : 494

Palm leaf 16½ × 1¼ inches – Lines 5 in a page.

Tamil – Injured, old.

Presented in 1921 – 22 by MRRY

Chokkalingam Pillai Avergal, Karnam

Karungalakkudi, Melur Taluk, Madurai Dt.

## வீரையனம்மானை

## VIRAYYANAMMANAI

Stanzas relating to the biography of Virayyan, son of a King of Benares :

Incomplete.

Beginning :

கணபதியை நோக்கிக் கைதொழு வேனம்மானை
கணபதியை [ன] ம் [ப] (பு) வோர்க்குக் கருமங்கள்தாம் தொலையும்.

End.

தானிருக்கும் கோட்டை தாண்டிக் குதிக்கையிலே
கண்டந்தச் சே [வு] (வ) கரும் கள்ளனென்று தாம் பிடித்து.

(கு. பு.) –

இது வீரையன் என்னும் பிரபுவின் மீது இயற்றப்பட்ட நூல், எளிய நடையிலானது. இந்தப் பிரதியில் இது முற்றுப்பெற வில்லை. ஏடுகளிற்சில மாறுபடக் கோக்கப்பட்டுள்ளன.

---

# பிழை திருத்தம்

| வரி | பிழை | | திருத்தம் |
|---|---|---|---|
| 237 | புத்திரந்தான் | — | புத்திரன் தான் |
| 302 | ே லான | . | மேலான |
| 331 | துணையாயிருந்து | -- | துணையாயிருந்து |
| 558 | செய்யுமென்றுன் | --- | செய்யுமென்றுள் |
| 619 | பி ளைக்கள | — | பிள்ளைக்கலி |
| 665 | ெ முகிப் | -- | மெழுகிப் |
| 764 | காந்திரகூவி | -- | சந்திரகாவி |
| 984 | தெண்டனிட்டன் | — | தெண்டனிட்டான் |
| 1077 | 3 முதாடு | — | 3 சமுதாடு |
| 1303 | நானறயேன் | --- | நானறியேன் |
| 1467 | பானம் | -- | பாணம் |
| 1497 | கொண்டிருநதேன் | -- | கொண்டிருந்தேன் |
| 1505 | தான் ே ட்க | — | தான் கேட்க |

